# உள்ளடக்கம்

# 1. திருத்தல வரலாறு

எல்லாத் திருத்தலங்களுக்கும் உள்ளது போன்றே திருகோகர்ணத்துக்கும் புராணக் கதை ஒன்று உண்டு. அதன் அடிப்படையிலேயே திரு-கோ-கர்ணம் என்ற ஊர்ப் பெயரும் அமைந்தது.

ஒருமுறை அமரருலகில் தேவர்களின் தலைவனான இந்திரனின் அவை கூடியிருந்தபோது, எல்லோரும் குறித்த நேரத்தில் அவைக்கு வந்து விட்டார்கள். கேட்டதை யெல்லாம் வாரி வழங்கும் இயல்புடைய தெய்வப் பசுவான காமதேனு மட்டும் சற்றுக் காலம் கடந்து வர நேரிட்டுவிட்டது.

இதனால் தேவேந்திரனுக்குக் கடும் கோபம் உண்டா யிற்று. காமதேனு, தாமதமானதற்காகக் கூறிய காரணங்கள் எதையும் கேட்பதற்கு அவன் விரும்பவில்லை. "நேரங் கடந்து நீ அவைக்கு வந்திருக்கிறாய், சமாதானங்களை ஏற்க மாட்டேன், உன்னுடைய தாமதமான வருகைக்கு உரிய தண்டனையாக, நீ பூமியில் போய் பசுவாய்ப் பிறப்பாயாக" என்று சாபம் தந்துவிட்டான்.

வேறு வழியில்லை; தேவேந்திரனின் சாபமாயிற்றே! காமதேனுப் பசு பூமியில் வந்து சாதாரணமான பசுவாகப்

ஜ்வரஹேஸ்வரர், பைரவர், சூர்யன், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் (நால்வர்), சந்திர பகவான், தண்டாயுதபாணி ஆகியோரின் திருமேனிகள் காணவேண்டியவை.

இந்த நால்வர் மேடைக்குத் தென்புறமாக, மலையில் வெட்டப்பட்ட படிக்கட்டுகள் இறங்கும். சற்றுத்தொலைவில் இந்தப் பாதையைச் சுவர் வைத்துத் தடுத்துவிட்டார்கள்.

ஒரு காலத்தில், சுனையிலிருந்து ஆலயப் பணி களுக்கான தண்ணீரை இந்த வழியாகவே எடுத்துச் சென்றிருக்கிறார்கள் என நம்பலாம். இந்தப் படிகள், சுவர்த் தடுப்பு இல்லாவிட்டால் கீழேயுள்ள ஆதிதேவதையான மங்களநாயகி கருவறையின் கிழக்குத் திருச்சுற்றுவரை வரவேண்டும்..

சுனை வழியில் மேலே சென்றால் இடப்புறப் பாறைப் பிளவில் வற்றாத சுனை இருக்கிறது. சுனைக்குக் கிழக்கே பாறை நல்ல உயரத்தில் செல்கிறது. அதன் உச்சியில் நாகர் திருமேனிகள் உள்ளன. இங்கும் பக்தர்கள் வந்து வழிபட்டு வலம் வருகிறார்கள்.

சுனையையும், நாகரையும் தரிசித்து விட்டு மலைப் படிகளில் நிதானமாக இறங்கி, இடப்புறம் திரும்பிக் கொடி மரத்தை வலம் வந்து கீழே வரவேண்டும். மீண்டும் படிக் கட்டுக்களில் இறங்கி, இடப்புறம் திரும்பினால் உயரமான மண்டபம் போன்ற பகுதியில், ஆடல்வல்லானாகிய நடராஜரின் பஞ்சலோகத் திருமேனியை தரிசிக்கலாம். அருகிலேயே இடம்பெற்றுள்ள சிவகாமி அம்மையையும், நால்வர் திருமேனிகளையும் தரிசிக்கலாம். அப்படியே நடந்து வலம் வந்தால் மங்கள நாயகியின் கருவறையை அடைந்து தேவியை தரிசிக்கலாம்.

மீண்டும் படியிறங்க வேண்டும். இடப்புறம் கோயிலின் கிழக்கே மங்களதீர்த்தம், மங்களதீர்த்த மண்டபம், குதிரை வீரர்களின் சிற்பத் திருமேனிகள் எல்லா வற்றையும் காணலாம். மங்கள தீர்த்தத்துக்குப் போகும் வழியைக் கீழைவாசல் என்பார்கள். இந்த மண்டபம் பாண்டிய மன்னர்களாலும், தொண்டைமான் மன்னர் களாலும் உருவாக்கப்பட்டிருக்கிறது. மண்டபத்தின் தென் பகுதியில் அன்னை பிரகதாம்பிகையின் சந்நிதிக்கு எதிரே, கோபுரத்தோடு கூடிய நுழைவாயில் ஒன்று உருவாக்கப் பட்டுள்ளது.

மங்களாம்பிகை சந்நிதிக்குக் கீழே, விசாலமான மண்டபம் ஒன்று அழகான சிற்ப வேலைப்பாடுகளுடன் விளங்குகிறது. இது குலசேகர பாண்டியன் காலத்துத் திருப்பணி என்கிறார்கள். புதுக்கோட்டைப் பகுதியை, தொண்டைமான்களுக்கு முன்னால் ஆண்ட பல்லவ ராயர்களின் சிலைகள் மண்டபத் தூண்களில் காணப்படு கின்றன. தவிர யாளிகள், துர்க்கை போன்ற சிற்பத் திரு மேனிகளையும் காணலாம்.

இம்மண்டபத்தின் மேற்குக் கோடியில் இத்தலத்தின் ஆதிமூர்த்தியாக விளங்கியிருக்கக் கூடிய வகுளவனேசுவ ரரின் லிங்கத் திருமேனி உள்ளது. பசு வடிவில் வந்து பிறப்பெடுத்த காமதேனுவின் குளம்புத்தடம் இத் திருமேனியில் பதிந்திருப்பதாய்ச் சொல்வார்கள்.

எதிரே நந்தி ஒன்று, செவ்வக வடிவிலான தொட் டிக்குள் அமைக்கப்பட்டிருக்கிறது. வறட்சிக் காலங்களில்; இந்த நந்தி மூழ்கும்படி தொட்டியில் தண்ணீர் நிரப்பினால் மழை பெய்யும் என்னும் நம்பிக்கை உண்டு.

இதன் பொருள் 'சிவ பக்தனும், ருத்ராச்சார்யரின் சீடருமான அரசனால், இசை பயிலும் மாணவர்களின் நலனுக்காக உருவாக்கப்பட்டது' என்று அமையும்.

திருமெய்யம் என்னுமிடத்தில் உள்ள சிவாலயத்திலும் சிதைவுற்ற நிலையில் சில இசைக் குறிப்புக்கள் காணப்படுகின்றன. மலையக் கோவில் என்னுமிடத்தில் உள்ள கிழக்கு குகைப் பகுதிக் கல்வெட்டில், குடுமியாமலை, திருமெய்யத்தில் காணப்படுவது போலவே சில இசைக் குறிப்புக்களை ஆய்வாளர்கள் கண்டறிந்துள்ளனர். 'பரிவாதினீத' என்று ஒரு சொல் காணப்படுகிறது. இது வீணையில் எழுப்பப்படும் ஒலி வடிவம் பற்றியதாக இருக்கலாம் என்கிறார்கள்.

மேலைக் கோவில் (குடுமியாமலை), திருமெய்யம், திருகோகர்ணம், மலையக் கோவில் நான்குமே மகேந்திர வர்மன் காலத்துக் குடைவரைக் கோயில்கள்தாம். நார்த்தா மலையில் மேல மலையில் உள்ள குகைக் கோவில் - பழியிலி ஈசுவரம் என்பதை முதலாம் மகேந்திரவர்மனின் சமகாலத்தவனான சாத்தன் பழியிலி என்பவன் குடைந்து உருவாக்கியதாக ஒரு கல்வெட்டுச் செய்தி உள்ளது.

கொடும்பாளூர் மூவர் கோயில்தான் மிகவும் பழைமையானது. கொடும்பாளூர் வரலாற்றில் மிகுந்த சிறப்பான இடம் பெற்ற நகரம். சோழர்கள் காலத்தில் மிகவும் புகழ் பெற்ற வாணிக மையமாகத் திகழ்ந்திருக்கிறது இது. சோழர், பாண்டியர் காலங்களில், ஸ்ரீலங்கா, பர்மா, இந்தோனேஷியா, சீனா, பெர்சியா போன்ற நாடுகளோடு வாணிகத் தொடர்பு இருந்திருக்கிறது.

# 8. தேர்கள் ஓடிய திருத்தலம்

அருள்மிகு பிரகதம்பாள் உடனுறை கோகர்ணேசுவரர் திருக்கோயில் அமைந்துள்ள வடக்கு வீதியில் வரிசையாக, அற்புதமான மரச் சிற்ப வேலைப்பாடுகளோடு கூடிய ஐந்து தேர்கள் உண்டு. இப்போது இவை வீதி வலம் வரும் நிலையில் இல்லாமையால் கூரை வேயப்பட்டு மூடி வைக்கப்பட்டுள்ளன.

திருக்கோயில் நுழைவாயிலுக்குச் சற்று முன்னால் இடப்புறத்தில் சுவாமி தேர் நிற்கிறது. இதற்கு மேற்கில் சற்றுத் தொலைவில் அம்மன் தேரும், அதை அடுத்துக் கடைசியாக, பெரியகுளக்கரை மீனாக்ஷியம்மன் ஆலயத்துக்கு எதிரில் சண்டேசுவரருக்காக ஒரு குட்டித் தேரும் நிற்கின்றன. ஆலய நுழை வாயிலுக்கு வலப்புறம் முதலில் சுப்பிரமணியர் தேரும், அதற்குக் கிழக்கில் சற்றுச் சிறியதான பிள்ளையார் தேரும் நிற்கும்.

சுவாமி தேரும் அம்மன் தேரும் பதினேழாம் நூற்றாண்டில் பல்லவராயர்களால் செய்யப்பட்டன என்றும், விநாயகர், சுப்பிரமணியர், சண்டேசுவரர் - ஆகியோரின் மூன்று தேர்களும் பிற்காலத்தில் தொண்டைமான் மன்னர்களால் செய்யப்பட்டன என்றும் சொல்கிறார்கள். ஆனால் பல்லவராயர்கள் காலத்துக்கு முன்பே இத்தலத்தில் தேரோட்டம் நிகழ்ந்திருக்கிறது.

**புதுக்கோட்டை நகர் எல்லைக்குள் உள்ள முக்கியமான திருக்கோவில்களின் விவரம்.**

*1. திருகோகர்ணம் அருள்மிகு பிரகதம்பாள் உடனுறை கோகர்ணேசுவரர் திருக்கோவில்.*

*2. புதுக்கோட்டை சாந்தநாத சுவாமி திருக்கோவில்*

*3. வரதராஜப்பெருமாள் கோயில் (கீழ மூன்றாம் வீதி)*

*4. வேங்கடேசப் பெருமாள் கோயில் (அய்யர் குளக்கரை)*

*5. அரிய நாச்சியம்மன் கோவில்*

*6. மனோன்மணியம்மன் கோவில்*

*7. காமாக்ஷியம்மன் கோவில்*

*8. திருவப்பூர் அருள்மிகு மாரியம்மன் கோவில்*

*9. திருவப்பூர் வேணுகோபால சுவாமி கோவில்*

*10. பொற்பனையான் கோவில்*

*11. தடிகொண்ட அய்யனார் கோவில்*

*12. சிங்கமுத்து அய்யனார் கோவில்*

*13. திருவப்பூர் செல்லியம்மன் கோவில்*

*14. திருகோகர்ணம் மீனாக்ஷி சுந்தரேசுவரர் கோயில் (சின்னக் கோவில்)*

*15. புதுத்தெரு, ஆஞ்சநேய சுவாமி கோவில்*

*16. அண்மையில் உருவான ஸ்ரீ புவனேஸ்வரி ஆலயம் (கீழ ஏழாம் வீதி)*

*17. கிரிவலப் பாதையில் உள்ள முருகன் கோவில் (அண்மைக்காலத்தது)*

# 11. வேங்கையாய் வழிமறித்த ஈசன்!

புதுக்கோட்டையிலிருந்து திருச்சிராப்பள்ளி செல்லும் சாலையில், ஐந்தாவது கி.மீ. 'திருவேங்கை வாசல்' என்னும் சிறிய மைல் கல்லைப் பார்த்து இடப்புறம் திரும்ப வேண்டும்.

'வியாக்ர புரீஸ்வரர்' திருக்கோயிலை அடையலாம். புகழ்பெற்ற தொண்டைமான் மன்னர்களின் குலதேவதை யாக விளங்கிய, திருகோகர்ணம் அருள்மிகு பிரகதம்பாள் - கோகர்ணேசுவரர் திருத்தல வரலாறோடு தொடர்புடையது இந்த 'வியாக்ரபுரி' என்னும் திருவேங்கை வாசல்.

பண்டை நாட்களில் மகிழ மரங்கள் அடர்ந்த காட்டில் இருந்தவர் மகிழவனேசுவரர் என்றும் வகுளவனேசுவரர் என்றும் வழங்கப்படும் சிவபெருமான். இவர்தான் திருகோ -கர்ணம் திருத்தலத்தின் பழைமையான மூலமூர்த்தி.

சாப விமோசனத்துக்காகத் தன் காதுகளில் கங்கை நீரை எடுத்து வந்து தினமும் அந்த ஈசனுக்கு அபிஷேகம் செய்து வந்தது காமதேனுப் பசு. அப்படி வந்த பசுவின் பக்தியை சோதிப்பதற்காக மகாதேவர், வேங்கையாக உருவெடுத்துப் பசுவை வழிமறித்த தலம் தான் திருவேங்கை வாசல் என வழங்கப்படுகிறது.

திருகோகர்ணம் அருள்மிகு பிரகதம்பாள் கோகர் ணேசுவரரை தரிசிக்கும் அன்பர்கள் சிரமம் பாராமல், இந்தத் திருக்கோவிலுக்கும் வந்து சுவாமியையும்

# திருகோகர்ணம் தலப்பெருமை !

(திருகோகர்ணம் அருள்மிகு பிரகதம்பாள் உடனுறை கோகர்ணேசுவரர் திருக்கோயில்)



சுப்ர. பாலன்






வானதி பதிப்பகம்
23, தீனதயாளு தெரு,
தி.நகர், சென்னை—17.

முதற் பதிப்பு : ஆகஸ்ட், 2005



திருநாவுக்கரசு தயாரிப்பு

விலை ரூ. 35.00

| | | |
|---|---|---|
| ❖ Title | : | THIRUGOKARNAM THALA PERUMAI |
| ❖ Author | : | SUBRA. BALAN |
| ❖ Language | : | Tamil |
| ❖ Subject | : | History |
| ❖ Edition | : | First Edition, August, 2005 |
| ❖ Pages | : | XII + 72 = 84<br>+ 12 Art pages |
| ❖ Published by | : | VANATHI PATHIPPAKAM<br>23, Deenadayalu Street,<br>Thyagaraya Nagar, Chennai–600017.<br>© 24342810 / 24310769<br>E-Mail : vanathipathippakam@vsnl.net<br>Website: vanathipathippakam.com |
| ❖ Price | : | Rs. 35.00 |

Laser typeset at : Azhagu Systems, Chennai-17.
Printed at : Malar Printers 044-8224803

# பதிப்புரை

தொண்டைமான் அரசர்களின் ஆட்சியில் வளம் கொழித்துச் சிறந்த பூமி புதுக்கோட்டை சமஸ்தானம். 'வானம் பார்த்த பூமி' என்று வழங்கப்பட்டபோதிலும், வறட்சி இன்றுபோல் இருந்ததில்லை! ஆன்மிக வளமும் இலக்கிய வளமும் நிறைந்த பூமி அது!

அந்த அரசர்களின் குலதேவதையாக விளங்கிய அன்னை பிரகதம்பாளின் திருக்கோவில், வரலாற்று, இலக்கியச் சிறப்புடையது. அண்மையில், 2005 ஜூன் 24இல் இத்திருக் கோவிலுக்குக் கும்பாபிஷேகம் நடந்தது.

இந்த ஆலயத்தின் மேம்பாட்டுக்குத் தொண்டாற்றும் 'அம்பாள் சாரிடபிள் டிரஸ்ட்' அமைப்பினர் விரும்பிய வாறு, புதுக்கோட்டை, திருகோகர்ணத்திலேயே பிறந்த இலக்கிய அன்பர் 'சுப்ர. பாலன்' மிகவும் வித்தியாசமான முறையில் இந்தத் 'திருகோகர்ணம் தலப் பெருமை' நூலை எழுதியிருக்கிறார். வண்ணப்படங்களை, கலைமாமணி 'யோகா' தனித்தன்மையோடு, பிரத்தியேகமாக எடுத்துத் தந்துள்ளார்.

இந்தச் சிறு நூலை, வானதி பதிப்பகம் பெருமை யோடு வெளியிடுகிறது. அனைவரும் வரவேற்று மகிழ்ந்து பயன்பெற வேண்டும்.

வாழ்த்துக்கள்.

சென்னை-17.
1-8-2005

அன்புடன்,
வானதி ஏ. திருநாவுக்கரசு

# பாராட்டுரை

இந்தியாவிலிருந்த சமஸ்தானங்களில் மிகவும் சிறியது புதுக்கோட்டை சமஸ்தானம். மூர்த்தி சிறிது என்றாலும் கீர்த்தி பெரிது என்பார்கள். அதுபோல புதுக்கோட்டை மிகவும் செல்வாக்குள்ள சமஸ்தானமாக ஆங்கிலேயர் காலத்தில் இருந்தது. அதற்கு காரணம் இந்த சமஸ்தானத்தை ஆண்ட மன்னர்களும், அவர்களுக்கு உறுதுணையாக இருந்த திவான்களும். குறிப்பாகச் சொல்வதென்றால் தற்போதுள்ள இப் புதுக்கோட்டை உருவாகப் பெரிதும் காரணமாக இருந்தவர் திவான் சேசையா சாஸ்திரி அவர்கள். அதேபோல் நிர்வாகச் சீர்திருத்தத்திலும் மேன்மையான ஆட்சிக்கும் வழிவகுத்தவர் டாட்டன்ஹாம் துரை. அவர் அறிமுகப்படுத்திய அலுவலகக் கோப்பு முறைகளும் (Filing System) அலுவலக நடைமுறைகளும் (D.O.M) இன்று இந்தியா பூராவும் பின்பற்றப்படுகிறது.

இன்று இந்தியாவிலுள்ள குறிப்பிடத்தக்க ஐந்து சிறப்பான சுற்றுலாத் தலங்களில் ஒன்று புதுக்கோட்டை. காரணம் இங்குள்ள கோயில்களும், சிற்பங்களும், ஓவியங் களும் கட்டடக் கலைகளும் ஆகும். சித்தன்ன வாசல் ஓவியம், குடுமியான் மலை, கொடும்பாளூர்ச் சிற்பங்கள், திருவரங்குளம், குன்றாண்டார் கோயில், ஆவுடையார்

கோயில், நார்த்தாமலைக் கோயில் -இவை பழைமை யானவை மட்டுமல்ல; வரலாற்றுச் சிறப்புமிக்கவையும் ஆகும்.

மன்னர்களின் குலதெய்வமான பிரகதம்பாள் அன்னை கோயில் கொண்டுள்ள ஆலயம் 1500 ஆண்டுகள் பழைமை யானது. இக்கோயில் அமைப்பு பல்வேறு முறைகளில் வித்தியாசமானது. பாண்டியர், பல்லவர், நாயக்கர் கால ஆட்சிகளின் முத்திரையைக் கொண்டுள்ளது. புதுக் கோட்டை மன்னர்கள் இக்கோயிலிலேயே தங்கள் முடி சூட்டு வைபவத்தை நடத்திக் கொண்டார்கள். அத்தோடு தங்கள் பெயருக்கு முன்னால் பிரகதம்பதாஸ் எனப் போட்டுக் கொள்வதையும் வழக்கமாகக் கொண்டார்கள். மைசூர் தசராப் பண்டிகையை அடுத்து இவ்வூரின் தசராப் பண்டிகை மிகவும் புகழ்பெற்றது.

இதுபோன்ற விஷயங்களை எல்லாம் இவ்வரலாற்று நூலில் திரு சுப்ர. பாலன் மிகவும் விரிவாக எழுதியுள்ளார். இக்கோவிலுக்கு விரிவான ஸ்தல புராணம் இல்லை என்ற குறையை நிவர்த்திக்கும் வகையில் மிகுந்த நடுநிலை உணர் வோடும் வரலாற்றுக் கண்ணோட்டத்தோடும், கல்வெட்டுச் செய்திகளின் துணையோடும் காலங்காலமாக வழங்கி வரும் கர்ண பரம்பரைக் கதைகளையும் ஆய்ந்து, இன்றைய உரைநடையில் எல்லோருக்கும் ஏற்புடைய வகையில் எழுதி உள்ளார், திரு. சுப்ர. பாலன். புதுக்கோட்டை மக்களின் நீண்ட நாள் கனவும் எதிர்பார்ப்பும் இன்று நனவாகிப் பூர்த்தியடைகிறது.

எல்லாவற்றிற்கும் மேலாக, கலைமாமணி விருது பெற்ற புகைப்படக் கலைஞர் 'யோகா'வின் புகைப் படங்கள் கோவிலை நம் கண் முன்னே கொண்டு வந்து

நிறுத்துகின்றன. கோயிலுள்ளேயே இருப்பது போன்ற உணர்வை ஏற்படுத்துகின்றன. சுவாமியை நேரில் தரிசிக்க முடியவில்லையே என்று ஏங்குபவர்களின் ஏக்கத்தைப் போக்குகின்றன, கலைமாமணி யோகாவின் படங்கள்.

சென்னைக்குக் குடிபெயர்ந்தாலும் தன் சொந்த ஊரையும் மக்களையும் மறவாத எழுத்தாளர் சுப்ர.பாலன் திருகோகர்ணத்தைச் சேர்ந்தவர் என்பதை அறிய மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். அம்பாளின் பெருமையையும் கோவிலின் சிறப்பையும் தனக்கே உரிய எளிய நடையில் இனிமையாக எழுதியுள்ளார். இக்கோவில் தக்கார் என்ற முறையில் என் பாராட்டுதல்களை மகிழ்ச்சியோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூல் உருவாக எல்லாவகையிலும் உதவியாக இருந்த மருத்துவர் ராமதாஸ், 'ஞானாலயா' கிருஷ்ண மூர்த்தி தம்பதியர், மற்றும் மணிமொழி ஆகியோர்க்கு நன்றி.

சிறப்பாக இந்நூலை வெளியிட்டுள்ள வானதி திருநாவுக்கரசு அவர்களுக்கு என் இதயங்கனிந்த நன்றியும் பாராட்டுதல்களும்.

அன்புடன்

திருக்கோகர்ணம்
*30.07.2005*

**ஆர். வயிரவன்**
(திருகோகர்ணம்
அருள்மிகு பிரகதம்பாள் கோயில் தக்கார்)

# என்னுரை

பெரும்பேறு பெற்றவன் நான். பிறந்த பூமியின் அதி தேவதையாக விளங்கும் அன்னை ஸ்ரீபிரகதம்பாள் ஸ்ரீகோ கர்ணேசுவரரின் திருப்பாத கமலங்களைப் புனிதமான உணர்வுகளோடு வணங்கி இச்சிறு நூலை சமர்ப்பிக்கிறேன்.

திருகோகர்ணம் மேட்டுத் தெருவில் பிறந்து கல்விகற்று, புதுக்கோட்டையிலேயே சில ஆண்டுகள் அரசுப் பணியிலும் இருந்து, பல இடங்களில் அலைந்துவிட்டு, முப்பதாண்டு களுக்கு முன்னால் நிரந்தரமாய்த் 'தருமமிகு சென்னை'யில் குடியேறியவன் நான்.

திருகோகர்ணம் ஆலயமும், அதிதேவதைகளும், ஆலய வளாகத்தின் ஒவ்வொரு சிறிய பகுதியும் எனக்கு நன்கு பரிச்சயமானவை. 'ஆனந்த விகடனு'க்காக அமரர் சில்பி, திருகோகர்ணம் ஆலயத் திருமேனிகளை ஒளிப்பட நேர்த்தி யில் கையால் வரைந்தபோது, பெரும்பாலும் அவரோடு சிறுவனாய் அமர்ந்து, கலைவளம் கண்ட வாய்ப்பும் பெற்றேன். அந்தக் கோட்டோவியக் கட்டுரைகள் 'தென் னாட்டுச் செல்வங்கள்' என்ற தலைப்பில் பத்து வாரங்கள் விகடனில் வெளியாயின.

அம்பிகையின் பக்தன் என்ற முறையில் ஓர் உறவு, எழுத்தில் ஓரளவு பெயர் வாங்கியவன் என்கிற பெருமிதம்- இவற்றை வைத்து, இந்த ஆலயப் பெருமைகளை நூல் வடிவில் தருவதற்கு ஒரு நல்வாய்ப்பை எனக்கு வழங்கிய போது நான் சிலிர்த்துப் போனேன். அம்பிகையின் பேரருள் என்பதன்றி வேறென்ன?

'ஸ்ரீஅம்பாள் சாரிடபிள் ட்ரஸ்ட்' அமைப்பைச் சேர்ந்த குழந்தைகள்நல மருத்துவர் டாக்டர் எஸ். ராமதாஸ் அவர்

களும், தமிழகத்துக்குப் பெருமைசேர்க்கும் இன்னொரு திருக்கோயிலாக விளங்கும் 'ஞானாலயா' நூலகத்தின் பி. கிருஷ்ணமூர்த்தி அவர்களும், அவர்களின் இலக்கியத் துணைவியார் டோரதி அவர்களும் என்னில் பெரும் நம்பிக்கை வைத்து இந்தப் பணியில் ஈடுபட நல்வாய்ப்பை நல்கினார்கள்.

என்னுடைய இதழியல் பணிகளிலும் கலைப் பயணங் களிலும் தன்னுடைய காமிராக் கண்ணோடு உடன்வந்து பெருமை சேர்க்கும் என் இனிய சகோதரர் கலைமாமணி 'யோகா' அவர்கள், என்னுடைய ஊரின் அதிதேவதையின் திருக்கோயிலையும் 'பார்த்துப்' பதிவுசெய்தது இறையருள் தந்த பெரும்பேறு.

இச்சிறு நூலை வெளியிட மிகுந்த மகிழ்ச்சியுடன் ஏற்ற பெரியவர் வானதி திருநாவுக்கரசு அவர்கள், புதுக்கோட்டைக் காரர் என்றும் சொல்லலாம். தேவகோட்டையார்தாமே!

அனைவருக்கும், இதில் ஆதரவு நல்கும் பெருமக் களுக்கும், சம்பிரதாயமானதுதான் எனினும், முழுமையான உள்ளன்போடும், உளநிறைவோடும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

மிகக் குறுகிய காலத்தில் மனநிறைவு தரும்வகையில் இந்நூலை டைப்செட் செய்து தந்துள்ள திரு அழகர் அவர் களுக்கும் என் நன்றி.

உலகெலாம் வாழ்க! அருளன்னை, இறைவன், பாதார விந்தங்களை மீண்டும் வணங்குகிறேன்.

அன்புடன்,

**சுப்ர. பாலன்**

(தி.சு. பாலசுப்ரமணியன்)

சென்னை-45.

# திருக்கோயில்
## *(விவரக் குறிப்பு)*

தலம் : திருகோகர்ணம்

மாவட்டம் : புதுக்கோட்டை (முன்னாளில் சமஸ்தானமாக விளங்கித் தொண்டைமான் மன்னர்களின் ஆட்சிக்கு உட்பட்டிருந்த பகுதி)

அடையும் வழி: திருச்சிராப்பள்ளி-புதுக்கோட்டை சாலையில், ஆலயவாயிலிலேயே பேருந்தில் வந்து இறங்க லாம்.

: புதுக்கோட்டை நகரிலிருந்து மேற்கில் இரண்டு கி.மீ. தொலைவு.

: புதுக்கோட்டை இரயில் நிலையத்திலிருந்து மூன்று கி.மீ. தொலைவு-நகரப்பேருந்து வசதியும் உண்டு.

- காரில் வருகிறவர்களுக்கு

: திருச்சியிலிருந்து புதுக்கோட்டை வரும் வழியில் வலப்புறம் நார்த்தாமலைக்குத் திரும்பி, வர லாற்றுப் புகழ்பெற்ற விஜயாலய சோழீஸ்வரம். சோழர் காலத்துப் பழைமையான ஆலயத்தைக் காணலாம்.

: அருள்மிகு மாரியம்மன் கோயில் இப்போது புகழ்பெற்ற தலம்.

: புதுக்கோட்டை நகருக்கு ஐந்து கி.மீ. முன்னால், வலப்புறம் திரும்பினால் சற்றுத் தொலைவில் உள்ளது. திருவேங்கைவாசல் என்னும் திருத் தலம். இங்கு தட்சிணாமூர்த்தி வடிவம் தனிச் சிறப்புடையது.

: ஊருக்குள் நுழையும்போது வலப்புறம் ஒரு பாறைமீது குதிரை வீரன் சிலை-கிராம தேவதை.

: இடப்புறம் மையமண்டபத்தோடு கூடிய சதுர வடிவிலான குளம். 'பெரிய குளம்' என்பது பெயர்.

மூலவர் : ஆதிக்கோயில்
மகிழவனேசுவரர் - மங்களநாயகி

: பிற்கால விரிவாக்கம்
கோகர்ணேசுவரர் - பிரகதம்பாள்
(பெரியநாயகி)

தீர்த்தம் : மலைப்பாதை மீதுள்ள சுனை 'கங்கா தீர்த்தம்' எனப்படும் வற்றாத ஊற்று.

ஆலயக் கிழக்கு வாயிலின் எதிரே இரண்டு குதிரை வீரர்கள் சிலையுள்ள மண்டபத்தின் முன்னால் மங்களதீர்த்தம் எனும் 'மங்களாங் குளம்.'

தலமரம் : மகிழமரம் (வகுளம் என்றால் மகிழ மரத்தைக் குறிக்கும்.) பண்டைக் காலத்தில் மகிழமரக் காடாக விளங்கிய தலம் என்பதால், இதன் பழம் பெயர் 'வகுள-ஆரண்ய-க்ஷேத்திரம்' என்பது.

தனிச்சிறப்பு : கோகர்ணேசுவரர் சந்நிதி உள்ள பகுதியும், கொடிமரப் பகுதியும் 7ஆம் நூற்றாண்டுப் பல்லவர் காலத்துக் கலைப்பாணி. பாறையை அப்படியே குடைந்து வடிவமைக்கப்பட்ட திருமேனிகள். 'குடைவரைக் கோயில்' அமைப்பு.

மூலவரின் கருவறைப் பகுதிக்கு மேல்புறத்தில் மாடிக்கோவில் அமைப்பும் உண்டு.

# வண்ணப்பட விளக்கம்

*அட்டையில்...*

அருள்மிகு கோகர்ணேசுவரரும் பாவை விளக்கும்

**உட்புறச் சிற்பங்கள்**

1. திருக்கோயில் நுழைவாயில்
2. அழகான முன்மண்டபம்
3. அருள்மிகு கோகர்ணேசுவரர்
4. அருள்மிகு பிரகதம்பாள்
5. குடைவரை விநாயகர்
6. குடைவரை கங்காதரர்
7. தலவிருட்சம், மகிழமரம்
8. பாறைச் சுனை, கங்காதீர்த்தம்
9. குடைவரை சப்தமாதர்கள்
10. ஸப்தலிங்கங்கள்
11. அம்மன் சந்நிதி நந்திச் சிற்பம்
12. அம்மன் சந்நிதி கொடிமரம்
13. கல்யாண மண்டபம் - ரதி மன்மதன்
14. தட்சிணாமூர்த்தியும், விநாயகரும்
15. அற்புதமான பாவை விளக்கு
16. திருவேங்கைவாசல் நுழைவாயில்
17. புகழ்பெற்ற தட்சிணாமூர்த்தி திருமேனி
18. துர்க்கை, தூண் சிற்பம்
19. மங்கள தீர்த்தக்கரைக் குதிரைச் சிற்பம்
20. துவார பாலர்
21. கல்யாண மண்டபச் சிற்பம்

வண்ணப்படங்கள்: கலைமாமணி 'யோகா'

# உள்ளடக்கம்

# 1. திருத்தல வரலாறு

எல்லாத் திருத்தலங்களுக்கும் உள்ளது போன்றே திருகோகர்ணத்துக்கும் புராணக் கதை ஒன்று உண்டு. அதன் அடிப்படையிலேயே திரு-கோ-கர்ணம் என்ற ஊர்ப் பெயரும் அமைந்தது.

ஒருமுறை அமரருலகில் தேவர்களின் தலைவனான இந்திரனின் அவை கூடியிருந்தபோது, எல்லோரும் குறித்த நேரத்தில் அவைக்கு வந்து விட்டார்கள். கேட்டதை யெல்லாம் வாரி வழங்கும் இயல்புடைய தெய்வப் பசுவான காமதேனு மட்டும் சற்றுக் காலம் கடந்து வர நேரிட்டுவிட்டது.

இதனால் தேவேந்திரனுக்குக் கடும் கோபம் உண்டா யிற்று. காமதேனு, தாமதமானதற்காகக் கூறிய காரணங்கள் எதையும் கேட்பதற்கு அவன் விரும்பவில்லை. "நேரங் கடந்து நீ அவைக்கு வந்திருக்கிறாய், சமாதானங்களை ஏற்க மாட்டேன், உன்னுடைய தாமதமான வருகைக்கு உரிய தண்டனையாக, நீ பூமியில் போய் பசுவாய்ப் பிறப்பாயாக" என்று சாபம் தந்துவிட்டான்.

வேறு வழியில்லை; தேவேந்திரனின் சாபமாயிற்றே! காமதேனுப் பசு பூமியில் வந்து சாதாரணமான பசுவாகப்

பிறப்பெடுத்தது. அதை மாமுனிவர் வசிட்டர் அன்போடு பேணிப் பாதுகாத்து வந்தார்.

பூமியில் வந்து பிறந்து விட்ட போதிலும் தெய்வப் பசுவுக்கு மனிதர்களோடு பேசும் ஆற்றல் இருந்திருக்கிறது. அத்துடன் தன் வினையையும், வினைப்பயனையும் உணர்ந்தநிலையிலும் இருந்தது.

ஒருநாள் மாமுனி வசிட்டரை வணங்கிய பசு, தன்னுடைய சாப விமோசனத்துக்கு ஏதேனும் வழியுண்டா என்று கூறி அருளுமாறு வேண்டி நின்றது.

மாமுனிவர் வழி சொன்னார். "பாரதத்தின் தென்பகுதியில் 'வகுளாரண்யம்' என்ற பெயரில் மகிழ மரங்கள் அடர்ந்த காடு ஒன்று உள்ளது. அங்கே கபிலர் என்னும் முனிவர் ஒருவர் தவம் இயற்றுகிறார். நீ அவரைச் சென்றடைந்தால் உன் சாபம் நீங்கும்."

வடமொழியில் 'வகுளம்' என்றால் மகிழமரம் என்று பொருள். 'வகுள ஆரண்யம்' என்பது மகிழமரக்காடு!

அவ்வாறே, நெடுந்தொலைவு நடந்த பசுவும் வகுளாரண்யத்தை அடைந்து கபில முனிவரிடம் சென்று வணங்கித் தன்னுடைய வரலாறைச் சொன்னது.

பசுவின் கதையைக் கேட்டு மனமிரங்கிய கபில முனிவர், அந்த மகிழவனத்தில் ஒரு சிவாலயம் இருப்பதாகவும், அதில் வகுளவனேசுவரர் என்கிற திருநாமத்தோடு மகாதேவர் அருள்பாலித்துக் கொண்டிருப்பதாகவும் சொல்லி, "தினமும் நீ கங்கை நீரால் வகுளவனேஸ்வரருக்கு அபிஷேகம் செய்து வந்தால் உன் சாபம் அகலும்" என்று வழி காட்டினார்.

அவ்வாறே தினமும் கங்கை நீரைத் தன்னுடைய காதுகளில் ஏந்திக்கொண்டு வந்து மகிழவனக் கடவுளுக்குப் புனித நீராட்டிக் கொண்டிருந்தது பசு. இந்நிலையில் அது ஒரு கன்றையும் ஈன்று பாலூட்டிக் கொண்டிருந்தது.

வழக்கமான இறைவன் பணியில் காதுகளில் கங்கை நீரோடு ஒருநாள் அது மகிழ வனத்துக்கு வரும் வழியில் ஒரு வேங்கைப்புலி வழிமறித்தது. உடனே அதைத் தனக்கு இரையாக்கிக் கொள்ளவும் முயன்றது வேங்கை.

வேங்கையிடம் மன்றாடியது பசு... "என்னை விட்டு விடு. நான் சிவனுக்கு அபிஷேகம் செய்வதற்காக கங்கை நீர் சுமந்து வந்து கொண்டிருக்கிறேன். என்னை இப்போது விட்டுவிடு. அபிஷேகம் முடித்து விட்டு, என்னுடைய இளங்கன்றுக்கும் பாலூட்டிப் பசியாற்றிவிட்டுத் தவறாமல் உனக்கு இரையாக வந்து விடுகிறேன். என்னை நம்பு. நான் சொல் மாற மாட்டேன்... தயவு செய்து என்னை மேலே செல்ல அனுமதித்து வழியை விடு" என்று வேண்டிக் கேட்டுக் கொண்டது.

சிவபிரானுக்கு 'அபிஷேகப் பிரியர்' என்கிற திருநாமம் உண்டு. தனக்குத் தினமும் கங்கை நீரால் திருமுழுக்காட்டி வரும் பசுவின் பக்தியில் மனம் பறிகொடுத்த சிவ பெருமான் - வகுளவனேசுவரர், அதை மேலும் சோதித்து முக்தியளிப்பதற்காகவே 'வேங்கை' வடிவெடுத்து வந்திருந்தார்; வழிமறித்தார்!

பசுவின் விருப்பத்தை ஏற்று, உடனே அதற்கு வழி விட்டது வேங்கை. சொன்ன சொல் தவறாமல், இறைவனுக்கு அபிஷேகம் செய்து விட்டுத் தன்னுடைய இளங்கன்றுக்கும் பாலூட்டிவிட்டு, வேங்கையின் முன் னால் வந்து இரையாக நின்றது பசு.

பசுவின் வாக்குத் தவறாத பண்பால் மகிழ்ச்சியடைந்த சிவபெருமான், ரிஷப-ஆரூடராகத் தம் தேவியோடு காட்சி யளித்து அந்தக் காமதேனுப் பசுவுக்கு நற்கதி அருளினார்.

வேங்கையாக உருமாறி சிவபெருமான் பசுவை வழி மறித்த இடம் 'திருவேங்கை வாசல்' என வழங்கப் படுகிறது. பசு(கோ)தன்னுடைய காதுகளில் (கர்ணம்) கங்கை நீரைக் கொண்டுவந்து ஈசனுக்குத் திருமுழுக் காட்டிய தலம் 'திரு-கோ-கர்ணம்' என்று வழங்கப்படு கிறது.

அபிஷேகம் செய்தது போக எஞ்சிய கங்கை நீரை, காமதேனுப்பசு பாறையைக் கொம்புகளால் கீறி அதில் வடித்துச் சேமித்ததாம். அது கபில தீர்த்தம் என்கிற பெயருடன், இன்றைய திருகோகர்ணம் கோகர்ணேசுவர் திருக்கோவில் மலைச் சுனையாக, வற்றாத பெருங் கருணையாய் என்றும் விளங்கிக் கொண்டிருக்கிறது. இதை 'கங்கா தீர்த்தம்' எனவும் வழங்குவதுண்டு.

**திருக்கோகர்ணம்**
**ஒரு முக்கியமான குறிப்பு:**

திருமுறை இலக்கியங்களில் கூறப்படும் திருக்கோ கர்ணம் இந்தத் தலம் அல்ல. திருஞான சம்பந்தர் பாடியுள்ள 'என்றும் அரியான் அயலவர்க்கு இயல்இசைப் பொருள்க ளாகி' என்று தொடங்கும் பதினொரு பாசுரங்களும், திருநாவுக்கரசர் பாடியுள்ள 'சந்திரனும் தண்புனலும்' என்று தொடங்கும் திருத்தாண்டகமும் குறிப்பிடும் 'திருக்கோ கர்ணம்' இப்போதைய கர்நாடக மாநிலத்தில் உள்ளது.

'கோகரன்' என்று வழங்கப்படும் இத்தலம் ஹூப்ளி நகரிலிருந்து 145 கி.மீ. தொலைவில் அரபிக் கடற்கரைப்

பகுதியில் உள்ளது. இதன் தல வரலாறுக்கும் நம்முடைய திரு-கோ-கர்ணம் தலவரலாறுக்கும் தொடர்பே இல்லை.

கர்நாடக மாநில 'கோகரன்' வரலாறு வருமாறு:

கயிலையிலிருந்து இராவணேசுவரன் ஒரு சிவ லிங்கத்தை எடுத்து வந்தான். மாலைக் கடன்களுக்காக, அதைத் தரையில் வைக்க விரும்பாமல் தவித்தபோது, சிறுவனாகத் தோன்றிய விநாயகப் பெருமான் சிவ லிங்கத்தை வாங்கிக் கொண்டார். இராவணன் தன்னுடைய பணிகளை முடித்துவிட்டு வருவதற்குள், நேரமாகிவிட்டது என்று சிவலிங்கத்தைத் தரையில் வைத்துப் போய்விட்டார் விநாயகர். இராவணன் வந்து பார்த்தபோது சிவலிங்கம் நன்கு தரை பதிந்துவிட்டது. இராவணனால் அதை மீண்டும் எடுக்க முடியவில்லை. லிங்கத்தின் காது மடல் அளவே வெளியே தெரிந்ததால், தலப்பெயர் 'கோ கர்ணம்' ஆயிற்று.

மற்றபடி அன்னை பிரகதம்பாள் உடனுறை கோகர்ணேசுவரர் திருக்கோயில் 'பாடல் பெற்ற தலம்' என்று அமையாது.

# 2. திருக்கோயில் அமைப்பும் – கருவறைகளும்

திருக்கோயில் வளாகத்தையொட்டி, கிழக்கில், ஒரு கற்பாறைப் பள்ளமாக 'மங்கள தீர்த்தம்' என்னும் புனித மான நீர்நிலை விளங்குகிறது. இத்திருக்குளத்தின் வடகரை யில் படிகள் கற்பாறையிலேயே செதுக்கப்பட்டுள்ளன. இவை மூலவரின் குடைவரை உருவான காலத்தில் உருவானதாயிருக்கலாம் என்கிறார்கள்.

இத்திருக்குளக் கரையில் கிழக்கு நோக்கியவாறு இரண்டு தூண்களில் அழகான குதிரை வீரர்களின் சிலைகள் வடிக்கப்பட்டுள்ளன. நுட்பமான சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்து பேரழகுடன் விளங்கியிருக்கக் கூடிய இச் சிற்பங்கள் பெருமளவில் சிதைத்து அழிக்கப்பட்டுள்ளன.

இத்திருக்குளத்துக்கு நேரே அமைந்துள்ளது வகுள வனேசுவரின் கிழக்குப் பார்த்த கருவறை. ஆண்டின் சில நாட்களில் சூரியனுடைய ஒளி இந்தச் சிவலிங்கத்தின் மீது படியும்.

பிரதான தேவதைகளான வகுளவனேசுவரர், கோ கர்ணேசுவரர், பிரகதம்பாள், மாடியில் உள்ள வள்ளி தெய்வ யானையுடன் கூடிய சுப்பிரமணியர் சந்நிதிகள் எல்லாம் கிழக்கு நோக்கியே உள்ளன. மங்கள நாயகி அம்மன் கருவறை மட்டும் தெற்குப் பார்த்து அமைந்துள்ளது.

ஒரு காலத்தில், இந்த மங்களாங்குளம் எனப்படும் மங்கள தீர்த்தத்தில் நீராடிவிட்டே பக்தர்கள் ஆலயத்துக்குள் வழிபாட்டுக்காக வந்திருப்பார்கள் என நம்பலாம். ஆலயத்தின் தெற்குப் பகுதியில் நகரம் விரிவடைந்ததை யொட்டி, பிரதான வாயில் தென் வடலாய் அமைந்து விட்டது.

கோயில் நுழைவாயிலுக்கு எதிரே சந்நிதி வீதி என்று அமைந்துள்ளது. இதை மையமாக வைத்து, பெரிய தெரு, ஒற்றைத் தெரு, வடக்கு வீதி, இராமலிங்கம் வீதி என்று நான்கு வீதிகள் சதுரவடிவில் அமைந்துள்ளன. இந்த நான்கும் தேர் ஓடிய திருவீதிகள்.

திருக்கோயில் நுழைவாயிலில் முன்பு கோபுரம் எதுவும் கிடையாது. இப்போது 2005 ஜூன் 24 இல் நடைபெற்ற குடமுழுக்கை ஒட்டிய திருப்பணியில், புதியதாகச் சிறிய கோபுரம் ஒன்றை அமைத்திருக்கிறார்கள்.

நுழைவாயிலுக்கு இடப்புறத்தில் தேரடி விநாயகர், கிழக்கு நோக்கி அமர்ந்து அருள்பாலித்துக் கொண்டிருக்கிறார். உயரமான மேடையை ஒட்டி இவருடைய சிறிய கருவறை உள்ளது. தேரடி விநாயகருக்கே காவல் இருக்கிற மாதிரி, கருவறைக்கு வெளியே இரண்டு அழகான யானைச் சிற்பங்கள் கொள்ளை அழகு! இந்த விநாயகர் 'சாட்சி'யாகத் திருமண முன்னேற்பாடுகள், மாப்பிள்ளை அழைப்பு போன்றவற்றை இந்த விநாயகர் மண்டப மேடையில் வைத்தே நிகழ்த்துகிறார்கள்.

எதிர்ப்புறச் சுவரிலும், பக்கத்துச் சுவரிலும், புதுக்கோட்டை சமஸ்தானத்தை ஆண்ட மன்னர்கள் சிலரின் திருவுருவங்களும், புதுக்கோட்டை நகரின் வளர்ச்சிக்கும் மேம்பாட்டுக்கும் பெருந்தொண்டாற்றிய திவான் சேஷையா

சாஸ்திரிகள் என்பாரின் தொந்தியும் தொப்பையுமான உருவமும் வரையப்பட்டுள்ளன.

நேரே நடந்தால் இருபுறமும் சிறிய திண்ணைகள் போன்ற அமைப்போடு நாற்புறமும் தூண்களோடு ஒரு சிறு மண்டபம் உண்டு. இதன் மேற்கூரைப் பகுதியில் இரண்டு கல்வளையங்கள் சங்கிலியாய்த் தொங்கிக் கொண்டிருப் பதைக் காணலாம். இதற்கு அனுப்பு மண்டபம் என்று பெயர். தரிசனம் முடிந்து வீடு திரும்புகிற பக்தர்கள் இந்தத் திண்ணைகளில் சிறிது நேரம் அமர்ந்து செல்வது என்பது ஒரு மரபு. ஆலயத்துக்குள்ளே கால்கடுக்க நடந்த களைப்புத் தீர, என்று இப்படி அமர்ந்து செல்லும் வழக்கம் ஏற் பட்டிருக்கலாம்.

இதனை அடுத்து இருபுறமும் உள்ள தூண்களில் நல்ல ஆகிருதியோடு கூடிய பத்துத்தலை, இருபது கரங்கள் கொண்ட இரண்டு உருவங்களை வெகு நேர்த்தியாகக் கல்லில் வடித்திருக்கிறார்கள். இரண்டிலும் கரங்கள் பெரிதும் சேதப்பட்டுள்ளன. இவை இராவணேசுவரனின் வடிவங்களாகவும் கருதலாம். ஏனெனில் அவன் சிறந்த சிவபக்தன் அல்லவா?

இந்தத் தூண்களுக்கு மேற்கில் பசுமடம் என்னும் கீதாரமும், அருகில் காசி, விசுவநாத சுவாமியின் கருவறை யும் உள்ளன. இதனை அடுத்துப் பதினாறு தூண்களோடு கூடிய மண்டபம் ஒன்று உண்டு. மையத்தில் உள்ள மேடையைச் சுற்றிலும் தண்ணீர் நிரப்புவதற்கேற்ற முறையில் அகழிப் பள்ளங்கள் நாற்புறமும் உள்ளன. நெடு நாட்களுக்கு முன்னால் வைகாசி மாதம் வசந்த விழாவின் போது இந்த அகழிப் பள்ளத்தில் நீர் நிரப்பப்பட்டது என்பது செவிவழிச் செய்தி.

ஆனி மாதம் மாம்பழத் திருவிழா என்று நடக்கும். இதை டோலோத்சவம் என்பார்கள். இறைவனும் இறைவியும் எழுந்தருளிக் காட்சி தருவார்கள். மைய மண்டபத்துக்கு நாற்புறமும் திருச்சுற்று உண்டு. இதில் இசை முழக்கங்களோடு ஸ்வாமியும் அம்பாளும் திருவுலா வருவதுண்டு. ஒவ்வொரு திருச்சுற்றிலும் வீணை, நாதசுரம், சங்கு என்று விதம்விதமான இசை முழங்கியதுண்டு.

இப்போது ஆவணி மூல உற்சவம் சிறப்பாக நடைபெறுகிறது. அன்றுதான் இறைவன் வேங்கை உருவத்தை விட்டுவிட்டு ரிஷப ஆரூடராய்க் காமதேனுப் பசுவுக்குக் காட்சி கொடுத்தார். அன்றைக்குத் தல புராணம் படிக்கும் வழக்கமும் உண்டு.

இவ்விழாக்கள் நடைபெறும் பதினாறு கால் மண்டபத்துக்கு வஸந்த மண்டபம் என்றே பெயர். பிள்ளையார், பள்ளி கொண்ட பெருமாள், நரசிம்மர், மகாலெட்சுமி, ஆஞ்சநேயர் போன்ற திருவுருவங்களையும், வேறுபல சிற்பங்களையும் தூண்களில் புடைப்புச் சிற்பங்களாய்க் காணலாம். இது நாயக்க மன்னர்களின் காலத்தில் அரசாண்ட பல்லவராயர்கள் என்னும் அரச வம்சத்தவரால் உருவாக்கப்பட்ட கலைப்படைப்பு.

அடுத்து, தென்புறவாயில் ராஜகோபுரம் வழியே திருக்கோயிலுக்குள் நுழைய வேண்டும். நுழைவாயிலுக்கு முன்னதாக இருபுறமும் உயரமான மேடைகளின் மீது துவாரபாலர்களின் நல்ல ஆகிருதியான சிற்ப வடிவங்களைக் காணலாம். வலப்புற மேடையில் முரசு உண்டு. பூஜை நேரங்களில், 'தம்... தம்.' என்று சீரான ஒலியோடு முரசு முழங்கும். இந்த துவார பாலர்கள் விஜயநகரப் பேரரசர்கள் காலத்துக் கலை வடிவங்கள்.

ராஜ கோபுர தரிசனம் வெளியிலிருந்து சாத்தியமே இல்லை. கிரிவலப் பாதை முடிந்து திரும்புகிற பகுதியி லிருந்து ஓரளவு காணலாம். திருக்கோவிலின் மாடிப் பகுதிக்குச் சென்றால், புதிதாக வண்ணமெருகு ஊட்டப் பட்டுள்ளன ராஜகோபுரம் முதல் எல்லாக் கருவறைகளின் சிகரங்களையும் கண்டு இன்புறலாம்.

ராஜகோபுர வாயிலைக் கடந்தவுடன் ராயத் தொண்டைமான் காலத்தில் எடுப்பிக்கப்பட்ட சிற்ப மண்டபம் உள்ளது. இதன் விதானப்பகுதியில் பன்னிரண்டு ராசிகளும் வடிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இதனால் சிற்ப மண்டபத்தை ராசி மண்டபம் எனவும் வழங்குவர்.

சிற்ப மண்டபம் ஓர் அருமையான கலைக் கருவூல மாய்த் திகழ்ந்திருக்கவேண்டும். இப்போது பெரும்பகுதி சேதப்படுத்தப்பட்ட நிலையிலும் அழகைக் கண்டு மனம் பறி கொடுக்க முடிகிறது. வீரபத்திரர், ரதி மன்மதன், அருச்சுனன், காளி நடனம், ஊர்த்துவ தாண்டவர், கர்ணன், இராமர், யாளிகள், குதிரை வீரர்கள் - என்று தூண்களில் அணிவகுக்கும் கலையழகை நிதானமாகக் கண்டு மகிழ வேண்டும்.

சிற்ப மண்டபத்தின் இடப்புறத்தில் கல்யாண மண்டபம் உள்ளது. இங்குதான் நவராத்திரி விழாவின் போது பத்து நாட்களும், அம்பிகைக்கு விதம் விதமான அவதார ஒப்பன்னைகள் செய்து வைத்திருப்பார்கள். மண்டபத்தின் இருபுறமும் பொம்மைக் கொலுவும் அழகாக இடம் பெறும். "மகிஷாசுரன் வதம்" போன்ற அச்சுறுத்தும் ஒப்பனைகளிலும் அம்பிகை காட்சியளிப்பார். இந்த மண்டபத்தில் தான் ஆடிப்பூரத் திருவிழாவின் முக்கிய நிகழ்ச்சியாக அம்மன் திருக்கல்யாணம் நிகழும்.

சிற்ப மண்டபத்தின் வலப்புறத்தில் ஊஞ்சல் மண்டபம் உள்ளது. இதுவும் பதினாறு கால்கள் கொண்ட அமைப்பு. புடைப்புச் சிற்பங்களாக நிறையக் கலை வடிவங்களைக் காணலாம். திருக்கல்யாணத்தன்று இறைவனும் இறைவியும் இங்கு ஊஞ்சலில் எழுந்தருளுவார்கள்.

சிற்ப மண்டபத்தைக் கடந்து நேரே நடந்தால் பிரதான மண்டபத்தை அடையலாம். இடப்புறம் திரும்பினால் நீளமான மேடையில் அறுபத்து மூவர் திருமேனிகள் அணி வகுக்கின்றன. அங்கு திரும்பாமல் சற்று நேரே வந்து இடப்புறம் திரும்பினால் அருள்மிகு பிரகதம்பாளின் கருவறைக்குள் நுழையலாம். அம்பிகையின் நின்ற திருக்கோலம், அர்ச்சகர்களின் விதம் விதமான ஒப்பனைகளால் பக்தர்களைக் கட்டி இழுக்கும். குறிப்பாக சந்தனக் காப்பு, வெள்ளிக் கவசங்கள், உள்ளங்கைகளில் மரகதக் கற்கள் உட்படப் பூரண ஒப்பனையில் அம்பிகையை தரிசிப்பது வாழ்வின் மிகப் பெரும் பேறு.

அம்மன் சந்நிதிக்கு நேரே கையில் விளக்கேந்தி நிற்கும் ஒரு பெண்ணின் திருமேனி கொள்ளை அழகுடன் உலோக வார்ப்பில் நின்று கொண்டிருக்கிறது. 'பாவை விளக்கு' என்று வழங்கப்படும் இச்சிற்ப சௌந்தர்யம் வெகு நுட்பமான அணிகலன்கள் ஆடை வேலைப்பாடுகளுடன் உயிர் வடிவமாய்க் காட்சி தருகிறது.

மேற்குப்புறம் படியேறினால் அன்னை பிரகதம்பிகையின் சந்நிதி. அம்பிகை தனிக் கருவறையில் அருள் பாலித்துக் கொண்டிருக்கிறார். புதுக்கோட்டை மன்னர் ஒருவர் கடற்பயணம் மேற்கொண்டிருந்த போது, கப்பலின் ஒரு பகுதியில் தீப்பற்றியதாகவும், அப்போது சின்னஞ்சிறு பெண் ஒருத்தி உறக்கத்திலிருந்த மன்னரை "தூங்குகிறாயே!

எழுந்திரு! கப்பலில் தீப் பற்றிவிட்டது." என்று சொல்லி எச்சரித்ததாகவும் சொல்வார்கள்.

தம்மை உறக்கம் கலைத்துக் காப்பாற்றிய சின்னஞ்சிறு பெண், அன்னை பிரகதம்பாளே என்று உணர்ந்தார் மன்னர்.

இந்த நிகழ்வின் நன்றி வெளிப்பாடாக அம்மன் சந்நிதியில் அணையா விளக்கு ஒன்று எப்போதும் சுடர் விட்டுக் கொண்டிருக்கிறது. இதற்கு வெள்ளியாலான கூண்டு ஒன்றும் வைத்து மூடியிருக்கிறார்கள். ஏறக்குறைய நூறாண்டுகள் பழைமையானது இந்த நந்தா விளக்கு! வெள்ளிக் கூண்டின் மேல் பகுதியில் '1912... மார்த்தாண்ட பைரவத் தொண்டைமான்...' என்று பொறிக்கப்பட்டிருக் கிறது.

அம்பிகையின் மீது இத்தனை ஈடுபாடும் பக்தியும் கொண்ட அந்த மாமன்னர், தம்முடைய வாழ்வின் பிற் பகுதியில் இத்திருக்கோயிலுக்கு வந்து வழிபட முடியாமல் போனது ஒரு சோகம். இவர் மோலிஃபிங்க் என்னும் ஆஸ்திரேலியப் பெண்மணியைக் காதலித்து மணந்து கொண்டதே காரணமாயிருக்க வேண்டும்.

1940ஆம் ஆண்டில் வெளியான கே.ஆர். வேங்கட ராமய்யர் எழுதியுள்ள புதுக்கோட்டை சமஸ்தான வரலாறு (A Manual of Pudukkottai State) என்னும் அற்புதமான நூலில், வெளிநாட்டுப் பெண்மணியை மணந்து கொண்ட மன்னர் திருகோகர்ணம் எல்லையில், திருச்சிராப்பள்ளி - புதுக்கோட்டைச் சாலையில் உள்ள கருப்பர் கோயிலில், நகராட்சி வரவேற்புக் குழுவினரால் வரவேற்று அழைத்துச் செல்லப்பட்டதாக ஒரு குறிப்பு உள்ளது.

அன்னை பிரகதம்பாள் கருவறைக்கு முன்னால் தென் புறம் விநாயகரும், வடபுறத்தில் பள்ளியறையும் உள்ளன

பள்ளியறைத் திருமேனிகள் சிறிய உருவங்களாயினும் கொள்ளை அழகோடு விளங்குகின்றன. அன்னையின் எதிரில் வெண்கலத்தாலான நந்தி இருப்பது புதுமையும் அரிதான சிற்பச் சிறப்பும் உடையது.

வெள்ளிக் கிழமை, சிறப்பான நாட்களில் முழுமை யான அலங்கார அணிமணிகளோடு அம்பிகையின் அருட் தோற்றம் பேசும் திருமேனியாகக் காட்சி தரும். சந்நிதியின் எதிரில், புடைப்புச் சிற்ப வேலைப்பாடுகளுடன் உலோகத் தகடுகள் போர்த்தப்பட்ட அழகான கொடி மரமும், அதற்கு அப்பால் தலவிருட்சமும் உள்ளன.

அம்பிகையின் கருவறைக்குத் தென்புறம் உள்ள படிக்கட்டில் இறங்கினால் எதிரே நீண்ட மேடையில் அறுபத்து மூவர் திருமேனிகள் வரிசையாக நின்று காட்சி யளிக்கிறார்கள். திருமேனிகளுக்கு மேலே, வண்ண ஓவிய மாகவும், உரிய திருநாமங்களுடனும் அறுபத்து மூவர் காட்சி தருகிறார்கள். மேடையின் மேற்குக் கோடியில் விநாயகர் திருமேனி உண்டு. இவற்றை அடுத்து, தனிக் கருவறையில், கிழக்கு நோக்கி அருள்பாலிக்கிறவர். ரிஷப ஆருடராக விளங்கும் சிவபெருமான். காட்சி கொடுத்த நாயனார் என்று வழங்குகிறார்கள். முக்கியமான நாட்களில் இவருக்கு விசேஷமான அபிஷேக ஆராதனைகள் நடை பெறும். அடுத்துக் காசிலிங்க தரிசனமும் உண்டு. அறுபத்து மூவர் மேடைக்கு எதிரில், அம்மன்சந்நிதியின் தென்புற வாயிலை ஒட்டிப் பல விநாயகர் திருமேனிகளைக் காணலாம்.

அறுபத்துமூவர் மேடைக்கு முன்பே அம்மன் கருவறையின் திருச்சுற்று ஆரம்பமாகிவிடும். கருவறை யின் பின்புறப்பாதை குடைவரைப் பாணியில் பாறையை

வெட்டி உருவாக்கப்பட்டிருக்கிறது. சுற்றின் இடப்புறத்தில் உள்ள மலைப்பாறையை வருடிக் கொண்டே நடந்தால் சிறிய படிக் கட்டுக்களின் மீது குட்டிக் கருவறையில் காட்சி தருகிறார் குழந்தை வடிவேலன்.

அடுத்ததாய் மீண்டும் ஏழு படிக்கட்டுகள் ஏறினால் சப்தலிங்க தரிசனம் கிடைக்கும். இந்தப் படிக்கட்டுகளின் கீழே, புதிதாக சங்கீதம் கற்றுக் கொள்ளும் மாணவர்கள், அரங்கேற்றத்துக்கு முன்னால் சப்தலிங்க சந்நிதியில் அமர்ந்து பாடி, அல்லது இசைக் கருவிகளை வாசிப்பது வழக்கம்.

அடுத்துச் செல்லவேண்டியது சுவாமி சந்நிதிக்கு. அதற்கு முன்னால், குழந்தை வடிவேலன் கருவறைக்கு எதிரில் சிறிய கட்டுமானத்தில் உள்ள சண்டேசுவரரை தரிசிப்பது வழக்கம். கோவிலுக்கு யார்யார் எல்லாம் வருகிறார்கள் என்று அவர் கவனிப்பாராம்.

சண்டேசுவரரைச் சுற்றி வருவதில்லை. கையை மட்டும் தட்டி ஒலியெழுப்புவார்கள். 'சிவன் சொத்து' எதையும் நான் எடுத்துச் செல்லவில்லை என்று அவரிடம் அறிவிப்பதாகும் அது. அப்படியே திரும்பி வடக்குப்புறம் படிக்கட்டில் ஏறி நடந்தால், இடப்புறப் பள்ளத்தில் ஸப்த கன்னிமாரை தரிசிக்கலாம். அப்படியே இன்னும் நடந்தால் சுவாமி சந்நிதி வரும். மூலவர் கோகர்ணேசுவரரை வணங்கிவிட்டு வலப்புறம் திரும்பிப் படியேற வேண்டும். அங்கே இரு புறமும் துவாரபாலர்கள் உண்டு.

சுவாமி கிழக்கு நோக்கியே அருள்பாலிக்கிறார். இவருக்கு இடப்புறம் விநாயகரும் வலப்புறம் கங்காதரரும் பாறைக் குடைவில் உருவானவர்கள். எதிரில் குடைவரைச்

சரிவில் அழகான கொடிமரம்-த்வஜஸ்தம்பம் நிற்கிறது. சுற்றிலும் போர்த்தியுள்ள தகடுகளில் முருகன், விநாயகர் முதலான திருமேனிகளை வடித்திருக்கிறார்கள்.

கொடிமரத்தைப் பார்ப்பதற்கு முன் துவாரபாலர்கள் உள்ள மண்டபத்தை விட்டுப் படியேறி இடப்புறம் திரும்பினால் மலையில் வெட்டப்பட்ட படிக்கட்டுகள் உண்டு. இவற்றின்மீது நடந்தால் திருக்கோயிலின் மாடிப் பகுதிக்குச் செல்லலாம்.

படிகளின் இடப்புறம் நிறையக் கல்வெட்டுக்கள் உண்டு. நேரே சென்றால் மலைச்சுனைக்குப் போகும் வழி. இடப்புறம் திரும்பினால், உயரமான தளத்தின் மீது வள்ளி தேவயானை சமேதரான சுப்பிரமணியரைக் கருவறையில் தரிசிக்கலாம். முருகனுக்குத் தென்புறம் சிறுசிறு கருவறை களில் வரிசையாக சரஸ்வதி, மகாலெக்ஷ்மி, துர்க்கை, அன்னபூரணி, ருத்ராட்சலிங்கம் ஆகியோரை தரிசிக்கலாம்.

முருகன் கருவறைக்கு எதிரில் வேம்பும் வில்வமும் தழைத்து வளர்ந்திருக்கின்றன. இந்த மேற்குப்புற மாடிப் பகுதியில் ராஜகோபுரம் உட்பட எல்லாக் கருவறைகளின் சிறுசிறு கோபுரங்களையும் ஒருசேரக் கண்டு மகிழலாம். மகிழமரம் நன்கு செழித்து வளர்ந்துள்ளது காண்பதற்கு அரியதான பசுமைத் தோற்றம். மகளிர் பயபக்தியோடு மகிழமரம் என்னும் திருத்தல மரத்தை வலம் வருகிறார்கள்.

இன்னும் சற்றுக் கிழக்கே நடந்தால் மாடியின் மேலே யிருந்து, மங்கள தீர்த்தம் என்று வழங்கப்படும் தெப்பக் குளத்தின் அழகிய காட்சியைக் காணலாம்.

ராஜகோபுரத்துக்கு மேற்கில் இக்கோவிலின் நந்த வனம் உள்ளது. மாடிப்பகுதியின் வலப்புறத்தில் பிரம்மா,

ஜ்வரஹேஸ்வரர், பைரவர், சூர்யன், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் (நால்வர்), சந்திர பகவான், தண்டாயுதபாணி ஆகியோரின் திருமேனிகள் காணவேண்டியவை.

இந்த நால்வர் மேடைக்குத் தென்புறமாக, மலையில் வெட்டப்பட்ட படிக்கட்டுகள் இறங்கும். சற்றுத்தொலைவில் இந்தப் பாதையைச் சுவர் வைத்துத் தடுத்துவிட்டார்கள்.

ஒரு காலத்தில், சுனையிலிருந்து ஆலயப் பணி களுக்கான தண்ணீரை இந்த வழியாகவே எடுத்துச் சென்றிருக்கிறார்கள் என நம்பலாம். இந்தப் படிகள், சுவர்த் தடுப்பு இல்லாவிட்டால் கீழேயுள்ள ஆதிதேவதையான மங்களநாயகி கருவறையின் கிழக்குத் திருச்சுற்றுவரை வரவேண்டும்..

சுனை வழியில் மேலே சென்றால் இடப்புறப் பாறைப் பிளவில் வற்றாத சுனை இருக்கிறது. சுனைக்குக் கிழக்கே பாறை நல்ல உயரத்தில் செல்கிறது. அதன் உச்சியில் நாகர் திருமேனிகள் உள்ளன. இங்கும் பக்தர்கள் வந்து வழிபட்டு வலம் வருகிறார்கள்.

சுனையையும், நாகரையும் தரிசித்து விட்டு மலைப் படிகளில் நிதானமாக இறங்கி, இடப்புறம் திரும்பிக் கொடி மரத்தை வலம் வந்து கீழே வரவேண்டும். மீண்டும் படிக் கட்டுக்களில் இறங்கி, இடப்புறம் திரும்பினால் உயரமான மண்டபம் போன்ற பகுதியில், ஆடல்வல்லானாகிய நடராஜரின் பஞ்சலோகத் திருமேனியை தரிசிக்கலாம். அருகிலேயே இடம்பெற்றுள்ள சிவகாமி அம்மையையும், நால்வர் திருமேனிகளையும் தரிசிக்கலாம். அப்படியே நடந்து வலம் வந்தால் மங்கள நாயகியின் கருவறையை அடைந்து தேவியை தரிசிக்கலாம்.

மீண்டும் படியிறங்க வேண்டும். இடப்புறம் கோயிலின் கிழக்கே மங்களதீர்த்தம், மங்களதீர்த்த மண்டபம், குதிரை வீரர்களின் சிற்பத் திருமேனிகள் எல்லா வற்றையும் காணலாம். மங்கள தீர்த்தத்துக்குப் போகும் வழியைக் கீழைவாசல் என்பார்கள். இந்த மண்டபம் பாண்டிய மன்னர்களாலும், தொண்டைமான் மன்னர் களாலும் உருவாக்கப்பட்டிருக்கிறது. மண்டபத்தின் தென் பகுதியில் அன்னை பிரகதாம்பிகையின் சந்நிதிக்கு எதிரே, கோபுரத்தோடு கூடிய நுழைவாயில் ஒன்று உருவாக்கப் பட்டுள்ளது.

மங்களாம்பிகை சந்நிதிக்குக் கீழே, விசாலமான மண்டபம் ஒன்று அழகான சிற்ப வேலைப்பாடுகளுடன் விளங்குகிறது. இது குலசேகர பாண்டியன் காலத்துத் திருப்பணி என்கிறார்கள். புதுக்கோட்டைப் பகுதியை, தொண்டைமான்களுக்கு முன்னால் ஆண்ட பல்லவ ராயர்களின் சிலைகள் மண்டபத் தூண்களில் காணப்படு கின்றன. தவிர யாளிகள், துர்க்கை போன்ற சிற்பத் திரு மேனிகளையும் காணலாம்.

இம்மண்டபத்தின் மேற்குக் கோடியில் இத்தலத்தின் ஆதிமூர்த்தியாக விளங்கியிருக்கக் கூடிய வகுளவனேசுவ ரரின் லிங்கத் திருமேனி உள்ளது. பசு வடிவில் வந்து பிறப்பெடுத்த காமதேனுவின் குளம்புத்தடம் இத் திருமேனியில் பதிந்திருப்பதாய்ச் சொல்வார்கள்.

எதிரே நந்தி ஒன்று, செவ்வக வடிவிலான தொட் டிக்குள் அமைக்கப்பட்டிருக்கிறது. வறட்சிக் காலங்களில்; இந்த நந்தி மூழ்கும்படி தொட்டியில் தண்ணீர் நிரப்பினால் மழை பெய்யும் என்னும் நம்பிக்கை உண்டு.

வகுளவனேஸ்வரர் திருக்கோயிலின் பின்புறப் புழையில் லிங்கோத்பவரின் திருமேனியும், வடக்கு நோக்கிய புழையில் பிரும்மாவும், இடம் பெற்றுள்ளனர். தெற்குப் புறப் புழையில் திருமேனியில்லை. எனினும் அதனருகில் தட்சிணாமூர்த்தியும், விநாயகப் பெருமானும் அருகருகே இடம் பெற்று அருள்பாலித்துக் கொண்டிருக்கிறார்கள். தெற்கு வடக்காக நீண்டுள்ள சந்நிதிவீதியிலிருந்து நேரே நடந்தால் இவர்களைத்தான் வந்து சந்திப்போம். உண்மையில் சந்நிதிவீதி என்பதை தட்சிணா மூர்த்தி சந்நிதியாகத்தான் கொள்ளவேண்டும்.

தட்சிணாமூர்த்திக்கும் விநாயகப் பெருமானுக்கும் வியாழக்கிழமைகளில் காலையில் ருத்ரஜபத்துடன் சிறப்பு ஆராதனைகள் நடைபெறுகின்றன.

அம்மன் சந்நிதிக்கு வடபுறத்தில் திருவீதியுலாவரும் முருகப்பெருமானின் திருமேனி இடம் பெற்றுள்ளது. அதை அடுத்து, வகுளவனேசுவரர் கருவறைக்குத் தெற்கில் ஸோமாஸ்கந்தர், அம்மன் திருமேனிகள் உள்ளன.

இவர்களை தரிசித்துவிட்டு, வகுளவனேசுவரர் கருவறையை வலம்வந்து கிழக்கு நோக்கி நடந்து, மங்கள நாயகியை நோக்கி வடக்குப் பார்த்து உடல் படிய வீழ்ந்து வணங்குவது வழக்கம். அப்படியே வணங்கி எழுந்து தெற்கு நோக்கி நடந்தால் கிணறும்; கிணற்றுக்குக் கிழக்கே ஒரு தட்சிணாமூர்த்தியின் திருமேனியும் உள்ளன. சற்றே சிதிலமடைந்துள்ள வடிவம் எனினும் அழகான கலைப் படைப்பு இது.

திருச்சுற்றில் தெற்கு நோக்கி வந்து மேற்கே திரும்புகிற பகுதியில்தான் வெள்ளிக்கிழமை ஊஞ்சல் மண்டபம் என்னும் சுக்ரவார மண்டபம் உள்ளது. இதை வலம்

வந்தால் ஒரு தூணில் சதாசிவபிரும்மேந்திரர் திருமேனி எண்ணெய்க் காப்பில் பளபளக்கும். பக்கத்திலேயே இந்த அவதூத சந்யாசியைப் பற்றிய வரலாற்றுக் குறிப்பைச் சுருக்கமாக எழுதி வைத்திருக்கிறார்கள். சதாசிவபிரும் மேந்திரர் திருச்சி மாவட்டம் கரூருக்கு அருகில் உள்ள நெரூர் என்னுமிடத்தில் சமாதியடைந்துள்ளார்.

நேரே வந்து பிரகதாம்பிகை அம்மன் சந்நிதியில் வடக்குப் பார்த்து வீழ்ந்து வணங்குவதோடு திருச்சுற்று தரிசனம் நிறைவடையும். திரும்புகையில், முன்னே சொல்லப்பட்ட கல் வளையங்கள் விதானத்தில் தொங்கும் அனுப்பு மண்டபத்தில் சில நிமிடங்கள் அமர்ந்து பின்னரே வீடு திரும்புகிற வழக்கம் உண்டு.

காலை நேரங்களில் திருக்கோயில் இடம் பெற் றுள்ளன குன்றைச் சுற்றி கிரிவலம் வருவது உண்டு. கிரிவலப் பாதை என்பது இப்போது சீரான அமைப்பில் உள்ளது. ஓர் ஐம்பதாண்டுகளுக்கு முன்னால், திருக்கோ கர்ணம் பெரிய தெருவில்; அருங்காட்சியகத்துக்கு மேற்குப் புற வீட்டில் இருந்த பெரியவர் அய்யாச்சாமி அய்யர் என்பவர், ஒற்றை ஆளாக இந்தப் பாதையைச் சீர் செய்து கொண்டிருந்தார். காலையில் எழுந்ததும் தட்டுக் கூடையை யும் மண் வெட்டியையும் எடுத்துக் கொண்டு கிரிவலப் பாதைத் 'திருப்பணி'க்குப் போனால் ஒன்பது, பத்து மணி வரை வேலை செய்துவிட்டு வருவார். உடலுழைப்பைக் கவனிக்காமல் விட்டு விட்ட இந்தத் தலைமுறை அந்தப் பெரியவரை நினைத்தாவது மனத்தால் வணங்கலாம். நாற்பதாண்டுகளுக்கு முன்னால் சில அன்பர்கள்'அவரை மேடையேற்றி, மாலை அணிவித்துப் பாராட்டிய நிகழ்ச்சி யும் நடந்தது.

# 3. புகழ்மிக்க அம்மன் காசுகளும் சதாசிவ பிரும்மேந்திரரும்

புதுக்கோட்டை என்ற உடனேயே பலருக்கு நினைவுக்கு வருவது 'அம்மன் காசுகள்' தாம்.

புதுக்கோட்டை சமஸ்தானமாக விளங்கிய போது, புழக்கத்திலிருந்த நாணயங்கள் இவை. மூன்று நூற்றாண்டுகள் புழக்கத்திலிருந்து 1934ஆம் ஆண்டில் நாணயங்கள் அச்சிடுவதை நிறுத்திவிட்டார்கள்.

செப்புக் காசுகள் இவை. குறுக்களவு பனிரண்டு மி.மீ. விரலில் ஒற்றியெடுத்து விடலாம். ஒருபுறம் பிரகதம்பாள் அம்மனின் அமர்ந்த திருக்கோலம் காணப்படும். மறுபுறம் 'விஜய' என்று தெலுங்கு மொழி எழுத்துக்களில் வடிக்கப் பட்டிருக்கும். அம்மன் உள்ள பக்கத்தில் சுற்றிலும் முத்துச் சரம் போல் புள்ளி புள்ளியான வட்டம்; எழுத்து உள்ள பக்கத்தில் வெறும் வளையக்கோடு காணப்படும். சுற்று விளிம்பு வரிவரியாக இல்லாமல் மழுமழு என்றே அமைந்திருக்கும்.

1730 முதல் 1760 வரை மன்னராக விளங்கிய ராஜா விஜயரகுநாதராயத் தொண்டைமான் அவர்களின் காலத்தில் இந்த அம்மன் காசுகள் முதன்முதலாய் அச்சிடப்பட்டு வழங்கப் பட்டிருக்கின்றன.

பட்டத்துக்கு வந்த எட்டாவது ஆண்டில், பின்னால் தமக்கு ஞானகுருவாக விளங்கப்போகும் மகான் ஸ்ரீசதாசிவ பிரும்மேந்திரரின் அருட்பார்வைக்கு ஆட்பட்டார் மன்னர் விஜயரகுநாதராயர். இந்த மகானின் அருளாசியால்





அம்மன் காசுகளும் சதாசிவ பிரும்மேந்திரரும்

புதுக்கோட்டை சமஸ்தானத்துக்குப் பல விதமான வளங்கள் சேர்ந்தன. சதாசிவ பிரும்மேந்திரரின் அருளாணைகளை ஏற்ற மன்னர், பல அறப்பணிகளை உருவாக்கி நடத்தி யிருக்கிறார்.

இவரைப் பற்றிய வரலாறு மிகவும் சுவையானதும் உணர்வு பூர்வமானதுமாக விளங்குகிறது. சமஸ்கிருத மொழியிலும் இலக்கணத்திலும் நல்ல பாண்டித்தியம் பெற்ற பின்னர் இந்த மகான் துறவு நிலை மேற் கொண்டிருக்கிறார். கும்பகோணத்தில், அந்தக் காலத்தில் ஐம்பத்தேழாவது சங்கராச்சார்ய சுவாமிகளாக விளங்கிய இரண்டாம் பரமசிவேந்திரர் அவர்களையே தம்முடைய குருவாகப் பெற்ற பெரும்பேறு இவருக்கு உண்டு. அவரிடம் வேதாந்தம், யோகக்கலை பயின்றதோடு ஓரளவு இசை ஞானமும் பெற்றிருக்கிறார் சதாசிவர்.

அத்வைத வேதாந்தம் தொடர்பான பல நூல்களை இவர் அப்போது எழுதினார். 'ஆத்ம வித்யா விலாசம்,' 'குரு ரத்ன மாலிகா' போன்றவை குறிப்பிடத்தக்கவை. அத்துடன் பல பக்திக் கீர்த்தனங்களையும், தத்துவப் பாடல்களையும் இயற்றியிருக்கிறார். பல கீர்த்தனைகளும் கர்நாடக சங்கீத வித்வான்களால் பாடப்பட்டு வருகின்றன.

தம்முடைய குருநாதருடனும், சக சிஷ்யர்களோடும் வேகமான விவாதங்களில் ஈடுபடும் இயல்புடையவரா யிருந்த சதாசிவரை, ஒரு சமயம், குருநாதரே சற்றுக் கடிந்து கொண்டிருக்கிறார். "சதாசிவா! நீ எப்போது உன் திருவாயை மூடிக்கொண்டு மௌனத்தைக் கடைபிடிக்கக் கற்றுக் கொள்ளப்போகிறாய்?" என்று,

அந்தக் கணமே, தன்னடக்கம் என்ன என்பதை உணர்ந்துகொண்ட சதாசிவர், குருநாதரிடம் மன்னிப்புக்

கேட்டுக் கொண்டார். அத்துடன் 'இனிமேல் வாய் திறப்பதே இல்லை' என்றும் சபதமெடுத்துக் கொண்டார். அதன் பின்னர் சதாசிவரின் ஜீவிய காலம் முழுமையும் கடுமையான மௌனம்தான்; பேசியதே இல்லை.

பல இடங்களில் மௌனத் துறவியாகவே அலைந்து திரிந்த சதாசிவர் ஓரிடத்திலும் நிலைத்துத் தங்கியதும் இல்லை என்கிறார்கள். ஆனால் காடுகளுக்கு உள்ளே சென்று மாதக் கணக்கில் தங்குவாராம். மைசூர் சமஸ்தானத் துக்கும் வேறு சில வடபாரத சமஸ்தானங்களுக்கும் சென்றிருக்கிறார் சதாசிவர்.

ஒருமுறை ஆழ்ந்த யோகத்தில் காவிரிப் படுகையில் சதாசிவர் அமர்ந்திருந்த போது வெள்ளம் பெருக்கெடுத்து ஓடி அவரையும் மூடி மணல் மேடிட்டுச் சூழ்ந்திருக்கிறது. வெள்ளம் வடிந்த பின் யாரோ மண்மேட்டை வெட்டிய போது மகான் உடம்பில் காயம்பட்டு இரத்தம் கசிந்த அனுபவமும் உண்டு.

கி.பி. 1738ஆம் ஆண்டில், விஜயரகுநாத ராயத் தொண்டைமான். சதாசிவரின் அருட்பார்வைக்குப் பாத்திரர் ஆனார். மன்னரும் சதாசிவ பிரும்மேந்திரரும் எங்கே முதன் முதலில் சந்தித்தார்கள் என்பதைச் சரிவர அறிந்து கொள்ள முடியவில்லை. எனினும் மகானைக் கண்டதும் அவர் ஒரு மகாஞானி என்பதை உணர்ந்த மன்னர், அவரை வணங்கி உபதேசம் கேட்டதாகச் சொல்கிறார்கள்.

வாய்பேசா மௌனத் துறவியான சதாசிவர் தம் பக்கத்திலிருந்த மணலில் தக்ஷிணாமூர்த்தி மந்திரத்தை எழுதிக் காட்டினாராம். அத்துடன் தம்முடன் சிறு வயதில் பாடம் பயின்ற மகாபாஷ்யம் கோபாலகிருஷ்ண சாஸ்திரி யார் என்பவரை ஆன்மிக குருவாக ஏற்று அருள்பெறும்

படியும் ஆணையிட்டாராம். சதாசிவர் எழுதிக் காட்டிய மணலை, அரண்மனையில் வைத்து பூஜை செய்து வருகின்றனர்.

சாஸ்திரியாரைத் தேடி வரவழைத்துத் தம்முடைய அரண்மனையில் குருநாதராக வைத்துக் கொண்டார் மன்னர் விஜய ரகுநாத ராயர். இவருடைய ஆலோசனையின் பேரில் மன்னர் மாளிகைக்கு உள்ளேயே தக்ஷிணாமூர்த்தி வழிபாடு தொடங்கப்பட்டது. அத்துடன் துர்க்கை, லெக்ஷ்மி, சரஸ்வதி மூவரும் வணங்கி வழிபடப்படும் தசராத் திருவிழாவும் - நவராத்திரி என்னும் பெயரில் தொடங்கி நடைபெற்றது. நவராத்திரியை ஒட்டி தினமும் ஏராளமான பிராமணர்களுக்கு 'ஸ்வயம்பாகம்' என்னும் உணவுக்காக அரிசி, பருப்பு, பணம் ஆகியவை வழங்கப்பட்டன. ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் சுமங்கலிப் பெண்களுக்கு உரிய தானங்களும் வழங்கப்பட்டன.

இன்றைய ஒரு லிட்டருக்கும் கொஞ்சம் கூடுதலான கொள்ளளவுள்ள முகத்தல் அளவை ஒன்று நடைமுறையிலிருந்தது. 'புதுக்கோட்டைப் படி' என்றே அது வழங்கப்பட்டு வந்தது. அதில்தான் அரிசியைத் தலைதட்டி அம்மன் காசுகளுடன் போடுவார்கள். நவராத்திரி விழாவில் வழங்கப்படுவதற்காகத் தான் இந்த 'அம்மன் காசு' உருவாக்கப்பட்டு அச்சிட்டு வழங்கப்பட்டிருக்கிறது.

இந்த ஞான உபதேசத்துக்குப் பின் சதாசிவர் மீண்டும் அலைந்து திரிந்துவிட்டு இறுதியாகக் கரூருக்கு அருகில் உள்ள நெரூர் என்னுமிடத்தில் சமாதியானார். இந்த சமாதியின் மேல் ஒரு கோயிலையும் எடுப்பித்து, பரமாரிப்புச் செலவுக்காக அறக்கட்டளையாகத் திருமயம் வட்டாரத்தில் இரண்டு கிராமங்களையும் எழுதி வைத்தார் மன்னர்.

# 4. வரலாற்றுக் காலங்கள்

இன்றைக்கும் திருகோகர்ணம் அருள்மிகு பிரகதம்பாள் உடனுறை கோகர்ணேசுவரர் திருக்கோயிலின் மேல்தளப் பகுதியில் அழகாகப் பசுமை தவழச் செழித்து வளர்ந்து, அன்பர்கள் வலம் வரப் பூரித்துப் பொங்கிப் பூச்சொரிந்து கொண்டிருக்கிறது தல விருட்சம் என்னும் பெருமைக்கு உரியதான மகிழ மரம்!

இதற்கு வயது சொல்ல முடியுமோ? அருள்மிகு பிரகதம்பாள் கருவறைக்கு நேர் எதிரே, வெள்ளிக்கிழமை ஊஞ்சல் நிகழும் சுக்ரவார மண்டபத்துக்குச் சற்று முன்னால், அழகான கட்டுமான மேடையில், இந்த மகிழ மரத்தின் அடிப்பகுதியையும் தரிசிக்கலாம், சற்றே உலர்ந்து மணம் பரப்பும் மகிழ மலர்களின் நறுமணத்தையும் அனுபவித்து மகிழலாம்.

ஒற்றை மகிழமரமே இத்தனை தெய்வீகமாய் மணம் பரப்புகிறதே, ஊர் முழுவதும் மகிழமரங்களாய் இருந்த நாட்கள் எப்படியிருந்திருக்கும்?

அப்போது ஊர் இல்லை, அடர்ந்த காடு, அதுவும் மகிழ மரக்காடு, இன்றைய 'கோகர்ண க்ஷேத்ரம்' என்னும் திருகோகர்ணத்துக்கு அந்தப் பழங்காலத்தில் என்ன பெயர்? இதை என்ன காடு அல்லது வனம் என்று வழங்கியிருப்பார்கள்? இங்கே யாரெல்லாம் குடியேறி வாழ்ந்திருப்பார்கள்? கண்களைச் சற்றே மூடிக் கொஞ்சம் கற்பனை செய்து பார்ப்பது கூட சுகமாகத்தான் இருக்கிறது.

இந்தப் பகுதியின் ஆதிக் குடிகள் என்கிற பெருமைக் குரியவர்கள் குறும்பர்கள், வேடர்கள் என்னும் பிரிவினர். முக்குலத்தோர் என்று பெருமையோடு குறிப்பிடப் பெறும் கள்ளர் மறவர் குலத்தவர்களைப் போர் வீரர்களாக இங்கே குடியேற்றினார்கள். வேளாண் தொழிலில் ஈடுபடுவதற் காகக் காராளர், வேளாளர் போன்றோர் குடியேறினார்கள். காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து வணிகப் பெருமக்களாக நகரத்தார் சமூகத்தினர் குடியேறினார்கள். ஓதுதல் ஓதுவித்தல் திருப்பணிக்காக அந்தண வகுப்பார் குடி யேற்றப்பட்டார்கள்.

இப்படி உருவானது திருகோகர்ணமும் இதைச் சுற்றியுள்ள சிறுசிறு ஊர்களும். பொதுவாக இப்பகுதியைத் தென்கவிர்நாடு என்று வழங்கியிருக்கிறார்கள். இன்றைக் கும், திருகோகர்ணம், திருவப்பூருக்கு மேற்கில் கவிநாட்டுக் கண்மாய் என்னும் பரந்து விரிந்த நீர் நிலை உள்ளது. இது நிரம்பி வடியும் தண்ணீர் குண்டாறு என்னும் பெயரோடு சிறிது தொலைவு ஓடி, விளை நிலங்களை வளப்படுத்தி, வெள்ளாறு என்னும் 'ஸ்வேத நதி'யில் கலந்து ஓடிய காலங்கள் உண்டு. ஆங்கிலேயர்களின் வருகைக்கு முன்னால் 'சோழப் பேரேரி' என்ற பெயரால் விளங்கி யிருக்கிறது கவிநாட்டுக் கண்மாய்.

முதலில் 'கோனாடு' என்றும் பின்னர் 'கேரளாந்தக வளநாடு' என்றும், அதன்பிறகு 'இரட்டைப்பாடி கொண்ட சோழவளநாடு' என்றும், அதற்குப் பின்னர் 'கடலடையாது இலங்கை கொண்ட சோழ வளநாடு' என்றும் வரலாற்றுப் புகழ் பெற்றது இப்பகுதி. புதுக்கோட்டையின் வடக்கிலும் மேற்கிலும் உள்ள இன்றைய குளித்தலை, திருச்சிராப்பள்ளி வட்டங்களின் சில பகுதிகளும் இதில் அடங்கும்.

புதுக்கோட்டைப் பகுதி உரட்டூர் குர்ரம், அன்ன வாயில் குர்ரம், ஒல்லையூர் குர்ரம் இவற்றை உள்ளடக்கி யிருந்தது.

இன்னொரு பகுதி பாண்டிக் குலாஸனி வளநாடு அல்லது ஜயசிங்க குலகால வளநாடு என்பதாய் விளங்கி, கீழ்செங்கிலி நாடு முதலான பத்துப் பிரிவுகளைக் கொண்டதாயிருந்தது. இந்தப் பத்தில் ஒன்றுதான் 'தென் கவிர்நாடு'

இன்றைக்குத் திருவப்பூர் என வழங்கப்படும் திரு வெட்பூர், கலசமங்கலம், சேடிகுல மாணிக்கபுரம், திரு கோகர்ணம் ஆகிய பகுதிகள் தென்கவிர் நாட்டில் இடம் பெற்றிருந்தன.

சோழர்கள், பாண்டியர்கள், பல்லவர்கள், விஜய நகரத்து அரசர்கள் என்று பலவகையான அரசியல் அலை களில் அகப்பட்ட புதுக்கோட்டைப் பகுதி, கடைசிக் காலத்தில் தொண்டமான் வம்சத்தவர்களால் ஆளப்பட்டது. இவர்களில் முதல்வராகக் கருதப்படும் திருமத் தொண்ட மான், தேவேந்திரனின் குலத்தோன்றல் என்பதாய், பதி னெட்டாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில், வெங்கப்ப நாயக்கர் என்னும் அரசவைக் கவிஞரால் எழுதப்பட்ட 'தொண்டமான் வம்சாவளி' என்னும் தெலுங்கு மொழிப் பாடலில் காணப்படுகிறது.

தமிழ்நாட்டின் தொண்டை மண்டலம் என்னும் பகுதியிலிருந்து புதுக்கோட்டை வட்டாரத்துக்கு வந்து குடி யேறியவர்கள்தாம் தொண்டைமான் வமிசத்தினர். திருப் பதிக்கு அருகில் மலை வாழ் மக்களாக வாழ்ந்த கள்ளர் இனத்தைச் சேர்ந்தவர்கள் இவர்கள்.

தொண்டைமான் சக்கரவர்த்தி என்பவர் புதுக்கோட்டை அருகேயுள்ள அம்புக் கோவில் பகுதியில் குடியேறினார். இது அழும்பில் நாடு என வழங்கப்பட்டது. இந்தத் தொண்டைமான் இனத்தவர்கள் காட்டு யானைகளை வேட்டையாடுவதில் புகழ்மிக்கவர்களாயிருந்தார்கள்.

ஆனால் ராயத் தொண்டைமான் என்று வழங்கப்பட்ட ஆவடை ரகுநாதத் தொண்டைமான் காலம் முதலே இந்தத் தொண்டைமான் மன்னர்களின் வம்சாவளி முறையாகப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. இந்த முதல் மன்னர் மறைந்தது 1661ஆம் ஆண்டில், விஜயநகர மன்னர் ஸ்ரீரங்கராயர் என்பவர், புதுக்கோட்டைப் பகுதியில் சுற்றுலாவாக வந்தபோது அவருடைய யானைகளில் ஒன்று தறிகெட்டு ஓடியதாம். கரம்பக்குடி என்னும் பகுதியைச் சேர்ந்த பச்சைத் தொண்டைமான் என்பவரின் மகனான ஆவடை ரகுநாதத் தொண்டைமான் என்பவர் மிகுந்த வீரத்தோடு யானையை அடக்கி அதை விஜயநகர மன்னரிடம் அழைத்துப் போய் ஒப்படைத்தாராம்.

இந்த வீரனின் திறமையை மெச்சிப் பாராட்டிய விஜய நகர மன்னர் ஸ்ரீரங்கராயர், 'ராய ராகுட்ட, ராய வஜ்ரிடு, ராய மண்ணிடுராய' என்று பட்டமளித்தார். அதைத் தொடர்ந்து இவர் 'ராயத் தொண்டைமான்' என்று அழைக்கப்பட்டார். பட்டமளித்ததோடு நில்லாமல், ஸ்ரீரங்கராயர், இந்த ராயத் தொண்டைமானுக்குக் கொஞ்சம் பூமியும், சில மரியாதைச் சின்னங்களையும் வேறு வழங்கியிருக்கிறார், அவை:

1. அம்பாரியோடு கூடிய யானை ஒன்று.
2. முரசுடன் கூடிய யானை ஒன்று
3. பல்லக்கு ஒன்று

4. ஒரு பெரிய முரசு
5. கண்ட பேரண்டப் பறவைச் சின்னம் (Insignia) (யானையையே உண்டு வாழும் பறவை என்று கருதப் பட்டது இந்தக் கண்டபேரண்டப் பறவை)
6. கருடன், அனுமன், சிங்கம், மீன் இவற்றின் உருவம் பதித்த கொடி
7. குதிரைகள், குடைகள்
8. பகலிலும் தீவட்டியைப் பயன்படுத்தும் உரிமை
9. இவரைப் புகழ்ந்து பாடிக் கொண்டே பல்லக்குக்கு முன்னால் செல்ல இரு பாணர்கள்.

இப்படிப் பிறந்த புதுக்கோட்டைத் தொண்டைமான் பரம்பரையில், அண்மையில் இறைவனடி சேர்ந்த ராஜா ராஜகோபாலத் தொண்டமான் வரை ஒன்பது மன்னர்கள் அரசாண்டிருக்கிறார்கள். இவர்களின் குல தெய்வப் பெருமைக்குரியவர் திருகோகர்ணத்தில் கோயில் கொண் டுள்ள அருள்மிகு பிரகதாம்பாள் அன்னை.

காசி, மதுரை, காஞ்சிபுரம் போன்ற சில திருத்தலங் களைப் போல், திருகோகர்ணத்திலும் அன்னையே முதலில் வைத்து வழிபடப்படும் பெருமைக்குரியவராய் விளங்கு கிறார். வடமொழி வழக்கில் கூட 'ஸ்ரீபிரகதம்பாள் ஸமேத கோகர்ணேஸ்வரர்' என இறைவன் போற்றி வழிபடப் படுகிறார்.

புதுக்கோட்டை சமஸ்தானத்தின் மன்னராட்சிக் காலம் 1948இல் நிறைவடைந்து, பாரதக் குடியரசோடு இணைந்தது. அது வரையில் இந்த சமஸ்தானத்தில் வாரத்தின் பொது விடுமுறை நாளாக விளங்கியது வெள்ளிக்கிழமைகள் தாம். புதுக்கோட்டை நகருக்குள், வாரச்சந்தை கூடுவதும் வெள்ளிக்கிழமைகளில்தான். அன்னை பிரகதாம்பிகைக்குச் சிறப்பான நாள் வெள்ளிக்கிழமைகள்.

# 5. பிரகதம்ப தாஸர்கள்

புதுக்கோட்டை சமஸ்தானமாக விளங்கிய போது, அந்த மன்னர்கள் தம்மை 'பிரகதாம்பதாஸ்' என்னும் பக்திபூர்வமான அடைமொழியோடு அழைத்துக் கொண்டு பெருமைப்பட்டார்கள். ஆங்கில அரசின் மரபுவழியில் வழங்கப்பட்ட 'ஹிஸ் ஹைனஸ்' என்னும் அடைமொழியை விடவும் 'பிரகதாம்ப தாஸ்' என்பதே அவர்களுக்கு உவப்பானதாய் இருந்திருக்க வேண்டும். தொண்டைமான் மன்னர்களின் குல தேவதையாக விளங்கி அவர்களையும், அவர்தம் குடி மக்களையும் காத்து வந்த பெருமைக்குரியவர் அருள்மிகு பிரகதாம்பாள் அன்னை.

திரு-கோ-கர்ணம் என்னும் பெயர்க் காரணத்துக்கான பழங்கதை 'வகுளவனேசுவரர்' 'கோகர்ணேசுவரர்' என்று சிவபெருமானைக் குறிப்பிடுவதாயிருந்தாலும், மதுரையைப் போல், காசியைப் போல், காஞ்சியைப் போல், அம்மையின் திருநாமமே முன் நின்று வழிகாட்டி அருள்பாலிக்கிறது.

இந்த பிரகதாம்ப தாஸர்களின் வரிசையையும் நினைவில் கொள்வது பொருத்தமாயிருக்கும். இம்மன்னர்களின் ஆட்சிக் காலத்தில், திருகோகர்ணம் திருக்கோயிலின் பழைமைச் சிறப்புடைய கட்டுமானம் சீரோடும் சிறப்போடும் பேணிப் பாதுகாக்கப்பட்டு குறிப்பிடத் தக்க



தொண்டைமான் வம்சத்தின் கடைசி மாமன்னர் 'ஹிஸ் ஹைனஸ்' ஸ்ரீபிரகதம்பதாஸ் ராஜா ராஜகோபாலத் தொண்டைமான் பகதூர் அவர்கள்.

*விரிவாக்கங்களும் நிகழ்ந்துள்ளன. இவற்றுள் மிகவும் குறிப்பிடத் தக்கது வெள்ளிக்கிழமைகளில், அம்பிகை ஊஞ்சலில் அமர்ந்து அருள்பாலிக்கும் பெருமையுடைய 'சுக்ரவார மண்டபம். 1730-1769இல் ஆட்சி பீடத்தை அலங்கரித்த ராஜா விஜய ரகுநாத ராயத் தொண்டைமான் அவர்களால் அறுகோண வடிவில், சற்று உயரமான மேடையின்மீது அமைக்கப்பட்டுள்ளது, இந்த சுக்ரவார மண்டபம்.*

*சுக்ர வார மண்டபத்தின் மேற்குப் பகுதிக் கல் தூண் ஒன்றில் சதாசிவ பிரும்மேந்திரர் என்னும் மகானின் திருவுருவம் வடிங்கப்பட்டுள்ளது. எப்போதும் எண் ணெய்க் காப்பில் விளக்கொளியில் பளபளக்கும் சிறிய திருமேனி இது.*

*தஞ்சாவூர் மாவட்டம் திருவிச நல்லூரில் பிறந்து, இளம் வயதில் துறவு நிலை மேற்கொண்டு ஆடையற்ற (அவதூத) நிலையில், புதுக்கோட்டை நகருக்கு அருகே யிருந்த திருவரங்குளம் காடுகளில் அலைந்து திரிந்து கொண்டிருந்தார் சதாசிவ பிரும்மேந்திரர். இவரை மன்னர் சந்தித்துத் தமது ஞான குருவாக ஏற்று நல்லுபதேசம் பெற்றிருக்கிறார்.*

**தொண்டைமான் மன்னர்களின் வரிசை**

1. *ராயத் தொண்டைமான் - ஆவடைத் தொண்டைமான்*
2. *ரகுநாத ராயத் தொண்டைமான் (1686-1730)*
3. *விஜயரகுநாத ராயத் தொண்டைமான் (1730-1769)*
4. *ராயரகுநாதத் தொண்டைமான் (1769-1789)*

5. *விஜய ரகுநாதத் தொண்டைமான் (1789-1807)*

6. *விஜயரகுநாத ராயத் தொண்டைமான் (1807-1825)*

7. *ரகுநாதத் தொண்டைமான் (1825-1839)*

8. *ராமச்சந்திரத் தொண்டைமான் (1839-1886)*

9. *மார்த்தாண்ட பைரவத் தொண்டைமான் (1886-1928)*

10. *ராஜா ராஜ கோபாலத் தொண்டைமான் (1928-*

இந்தக் கடைசி மன்னர், பிரகதாம்பதாஸ் ராஜா ராஜ கோபாலத் தொண்டைமான், திருகோகர்ணம் அருள்மிகு பிரகதாம்பாள் சந்நிதியின் நேர் எதிரே மங்களாம் குளக்கரை மண்டபத்தில் 1928 ஆம் ஆண்டு நவம்பர் 14 ஆம் நாள் மாலை 4.30 மணிக்குத் திருமுடி சூட்டிக் கொண்டார். இவருக்கு முந்தைய மன்னர் மார்த்தாண்ட பைரவத் தொண்டைமானும் இத்திருக்கோயிலிலேயே திருமுடி சூட்டிக்கொண்டிருக்கிறார். மகுடாபிஷேகத்துக்கு மங்கள தீர்த்தத்தையே புனித நீராய்ப் பயன்படுத்துவார்களாம்.

26555

# 6. இலக்கியம் தழைத்த பூமி

புறநானூற்றுப் பாடல் ஒன்று உண்டு. பெருஞ்சாத்தன் என்ற பெயருடன் ஒரு குறுநில மன்னன் விளங்கினான். வரலாற்றில் முக்கியமான இடம் பெற்ற பாண்டிய மன்னன் ஒருவன் பெயர் பூதப்பாண்டியன் என்பது. இவன் பெருஞ் சாத்தனைப் போரில் வென்றான். போர்க்களத்தில் மாண்டான் பெருஞ்சாத்தன்.

இன்றைய கும்பகோணத்துக்கு அருகே உள்ள இடம் குடவாயில் என்பது. அங்கிருந்த கீரத்தனார் என்னும் புலவர், சாத்தன் மாண்ட செய்தி கேட்டு, அவனுடைய நாட்டுக்கு வந்தார். நாடே துயரில் மூழ்கிக்கிடந்த போதும் முல்லைக் கொடிகள் பூத்துச் சிரித்துக் கொண்டிருந்த காட்சியைக் கண்ட புலவர் வேதனையுற்றார். ஒரு பாடல் பிறந்தது.

இளையோர் சூடார்
வளையோர் கொய்யார்
நல்லியாழ் மருப்பின்
மெல்ல வாங்கிப்
பாணன் சூடான்;
பாணினி அணியாள்.
ஆண்மை தோன்ற
ஆடவர்க் கடந்த
வல்வேற் சாத்தன்
மாய்ந்த பின்றை

முல்லையும் பூத்தியோ
ஒல்லையூர் நாட்டே? - (புறம்-242)

இப்படி ஒரு கவிதை கிடைத்தது தமிழ்நாட்டுக்கு! பெருஞ்சாத்தன் ஆண்ட நிலம் தான் ஒல்லையூர். புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள இந்த ஊர் ஒலிய மங்கலம் என்னும் பெயரோடு விளங்குகிறது.

புதுக்கோட்டை மாவட்டம் கறம்பக்குடி அருகில் இன்றைக்கு 'அம்புக் கோவில்' என வழிப்படுகிற இடம் சங்க காலத்தில் அழும்பில், அழும்பில் நாடு என்று விளங்கியுள்ளது. குடவாயில் கீரத்தனார் (அகம்-44), மாங்குடி மருதனார் (மதுரைக்-344) போன்றவர்கள் இந்த அழும்பில் நாட்டைப் பாடியுள்ளார்கள்.

இன்றைக்கும் ஆவூர் என்ற பெயரிலேயே விளங்கும் சிற்றூரில் ஆவூர்க்கிழார், ஆவூர் மூலங்கிழார் என்று இரு புலவர் பெருமக்கள் வாழ்ந்துள்ளனர்.

அவையாபட்டி என்கிற பெயரில் உள்ள ஓர் ஊர் ஔவை மூதாட்டி வாழ்ந்தது என்கிறார்கள். ஔவை, ஔவையார் என்னும் பெயரில் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் வாழ்ந்து இலக்கியத்துக்கு வளம் சேர்த்திருக்கிறார்கள். அவர்களுள் இந்த ஔவையும் ஒருவராயிருக்கலாம்.

அறுபத்து மூன்று நாயன்மார்களுள் இருவர் புதுக்கோட்டைப் பகுதியில் வாழ்ந்தவர்கள். ஒருவர் கொடும்பாளூரை ஆண்ட சிற்றரசன் இடங்கழி நாயனார். மற்றவர் தேவர்மலையைச் சேர்ந்த பெருமிழலைக் குறும்ப நாயனார்.

சைவம் தழைத்த பூமி என்னும் அளவுக்கு, சிவாலயங் களின் எண்ணிக்கை புதுக்கோட்டைப் பகுதியில் மிகுதி.

அவ்வாறே அருக சமயமும் (ஜைன மதம்) மிகவும் செல்வாக்கோடு விளங்கியிருக்கிறது. சான்றுகளாகத் திருக்கோகர்ணம் அருகிலேயே உள்ள சடையா பாறை, சித்தன்னவாசல், தேனிமலை, நார்த்தாமலை போன்ற இடங்களில் தீர்த்தங்கரர் திருமேனி வடிவங்களைக் காணலாம். தொல் பொருள் ஆய்வுக்குப் புகழ் பெற்ற திருக்கோகர்ணம் அருங்காட்சியகத்தில் கம்பீரமான தோற்றமுடைய பல ஜைன தீர்த்தங்கரர்களின் திருமேனி வடிவங்களைக் காணலாம்.

**பா**ரம்பரியமான சங்கீதத்திலும் புதுக்கோட்டைக்குச் சிறப்பான இடம் உண்டு.

கர்நாடக இசையுலகில் புகழ்பெற்ற கஞ்சிரா வித்வான்கள் மான்பூண்டியா பிள்ளையும் தட்சிணாமூர்த்தி பிள்ளையும் பிறந்து கலை வளர்த்த பூமி இது.

மகான் சதாசிவ பிரும்மேந்திரரின் சாகித்யங்கள் ஒருபுறம் இருக்க, மன்னர் விஜயரகுநாதத் தொண்டைமான் அவர்களே (1730-1769) ‘பிரகதம்பாள் பஞ்சரத்னம்’ என்று தமிழில் எழுதியிருக்கிறார். திருவாங்கூர் மன்னர் ஸ்வாதித் திருநாள் மகாராஜா அவர்களும் திருகோகர்ணம் அம்பாளின் மீது சில கீர்த்தனங்களைப் புனைந்திருக்கிறார்.

வீணை சுப்பராம பாகவதர் என்பவரும் அம்பிகையின் மீது சில கீர்த்தனங்களைப் புனைந்திருக்கிறார். ஒன்றை இந்த நூலில் காணலாம்.

குமரமலை என்னும் குன்றேறிநிற்கும் பாலமுருகன் மீது, குருபாததாசர் என்பார் பாடிய குமரேச சதகமும் விராலிமலை முருகன்மீது அருணகிரிநாதர் பாடியுள்ள பதினாறு திருப்புகழ்ப் பாடல்களும் பிரசித்தமானவை.

# 7. சில வரலாற்றுப் பதிவுகள்

**பு**துக்கோட்டை மாவட்டத்தின் பல பகுதிகளில் வரலாற்றுக்கு முந்தைய காலத்து (Pre-Historic) தடயங்கள் பல கிடைத்துள்ளன. இவற்றுள் மிகவும் குறிப்பிடத் தகுந்தவை 'முதுமக்கள் தாழி' எனப்படும் புதை பொருட் சின்னங்கள்.

இறந்து போன மனிதர்களின் உடல்களை சுடு மண்ணால் ஆன தாழிகளுக்குள் அமர்ந்த நிலையில் வைத்து, கூடவே அவர்களின் இறப்புக்குப் பிந்தைய 'வாழ்க்கை'க்கான உணவு, அணிகலன்கள், தானியங்கள், அவர்கள் பயன்படுத்திய ஆயுதங்கள் போன்றவற்றையும் தாழிக்குள் இட்டு, மணலால் நிரப்பி, மூடியிருக்கிறார்கள். இந்தத் தாழிகள், அதிகமான அளவில் 4 அடி (1.2 மீட்டர்) உயரமுடையதாகவும், 3.4 அடி (1.05 மீட்டர்) அகல முடையதாகவும் கிடைத்துள்ளன.

இவை, புல்வயல் காட்டுப்பகுதியில் இருந்த நிலையப் பட்டி, செல்லுகுடி, ஆரணிப் பட்டி, சடையாபாறை போன்ற இடங்களில் சென்ற நூற்றாண்டின் தொடக்கத் திலேயே (1917-1919) அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன. சில தாழிகளை அருங்காட்சியகத்திலும் வைத்திருக்கிறார்கள்.

புதுக்கோட்டைப் பகுதி, குறிப்பாக நார்த்தாமலை வட்டாரம் ரோமானியர்களோடு வாணிகத் தொடர்பு கொண்டிருந்தது. 1898ஆம் ஆண்டில், கருக்காக்குறிச்சி என்னுமிடத்தில், ஒரே இடத்தில் 501 பொன் காசுகள் புதையலாய்க் கிடைத்துள்ளன. 'கருக்காக்குறிச்சிப் புதையல்' என்று புகழ் பெற்ற கண்டு பிடிப்பு இது. இந்த நாணயங்களை அப்போதைய புதுக்கோட்டை மன்னர் பிரிட்டிஷ் அருங்காட்சியத்துக்கு அன்பளிப்பாக வழங்கி யிருப்பதாய், புதுக்கோட்டை சமஸ்தான வரலாறை எழுதிய கே.ஆர். வேங்கடராமய்யர் குறிப்பிட்டிருக்கிறார். இந்த நாணயங்களில் மிகப் பெரும்பாலானவை தேய்ந்த, அல்லது தேய்க்கப்பட்டு உருக்குலைந்தவை, எனினும் இவற்றை ஆய்வுசெய்த எஸ்.எஃப். ஹில் என்னும் ஆங்கிலேய அறிஞர் பின்வருமாறு வகைபிரித்துச் சொல்லி யிருக்கிறார்.

| | | |
|---|---|---|
| 1. | அகஸ்டஸ் ஸீஸர் (கி.மு. 29 - கி.பி. 14) | 40 |
| 2. | டைபீரியஸ் ஸீஸர் (கி.பி. 14-37) | 163 |
| | டைபீரியஸ், அகஸ்டஸ் | 6 |
| 3. | நீரோ துரூஸஸ் (கி.மு. 38 - கி.பி. 9) | 11 |
| 4. | அண்டோனியா (துரூஸஸின் மனைவி) | 15 |
| 5. | ஜெர்மானிக்கஸ் மற்றும் காலிகுலா | 8 |
| 6. | ஜெர்மானிக்கஸ் மனைவி ஆக்ரிப்பா | 1 |
| 7. | காலிகுலா (கி.பி. 37 - 41) | 5 |
| 8. | டி. க்ளாடியஸ் (கி.பி. 41- 50) | 89 |
| 8. | க்ளாடியஸ் மற்றும் நீரோ | 5 |
| 9. | ஆக்ரிப்பா மற்றும் க்ளாடியஸ் | 22 |

| | | |
|---|---|---|
| | *ஆக்ரிப்பா மற்றும் நீரோ* | *10* |
| *10.* | *நீரோ (கி.பி. 54 - 68)* | *123* |
| *11.* | *வெஸ்பாஸியானஸ் (கி.பி. 69 - 79)* | *3* |
| | *ஆக மொத்தம்* | *501* |

*இவற்றுள் 461 நாணயங்கள் மோசமாக உருக்குலைந் திருந்தனவாம்.*

*வரலாற்றுக் காலத்திலும் புதுக்கோட்டை வட்டாரம் மிகவும் புகழ் பெற்று விளங்கியிருக்கிறது. சோழர்கள், பல்லவர்கள், பிற்காலத்தில் விஜயநகர அரசர்கள் என்று கலைப் பணியில் வியத்தகு முறையில் பணியாற்றியிருக் கிறார்கள்.*

*'சித்திரக்காரப்புலி' என்று புகழப்பட்ட மகேந்திர வர்மன் பெயர் சொல்லி நிற்பவை சித்தன்னவாசல் குகையில் காணப்படும் வண்ண ஓவியங்கள். இவனுடைய சித்திரக் கலை ஆற்றலைப் பற்றி மாமண்டூர்க் கல்வெட்டில் ஒரு சொல் விளக்குகிறது. 'வர்ணச் சதுர்த்தா' (நாலாவது நிறத்தைக் கண்டறிந்தவன்) அல்லது 'வர்ணம் சந்த்ரார்ண வம்' (சந்திரார்ணவம் என்னும் வண்ணக்கலவை முறையை உருவாக்கியவன்) என்றும் பொருள் கொள்ளலாமாம்.*

*குடுமியா மலையில் உள்ள குடைவரைக் கோவிலில் புகழ்பெற்ற சங்கீதக் கல்வெட்டு காணப்படுகிறது அதன் வாசகம்:*

ஸ்ரீ ருத்ராசார்ய சிஷ்யேண
பரம மஹேஸ்வரேண ரஜ்ஞு
சிஷ்ய - ஹிதார்த்தம்
க்ருத ஸ்வரகம:

இதன் பொருள் 'சிவ பக்தனும், ருத்ராச்சார்யரின் சீடருமான அரசனால், இசை பயிலும் மாணவர்களின் நலனுக்காக உருவாக்கப்பட்டது' என்று அமையும்.

திருமெய்யம் என்னுமிடத்தில் உள்ள சிவாலயத்திலும் சிதைவுற்ற நிலையில் சில இசைக் குறிப்புக்கள் காணப்படு கின்றன. மலையக் கோவில் என்னுமிடத்தில் உள்ள கிழக்கு குகைப் பகுதிக் கல்வெட்டில், குடுமியாமலை, திருமெய் யத்தில் காணப்படுவது போலவே சில இசைக் குறிப்புக் களை ஆய்வாளர்கள் கண்டறிந்துள்ளனர். 'பரிவாதினீத' என்று ஒரு சொல் காணப்படுகிறது. இது வீணையில் எழுப்பப்படும் ஒலி வடிவம் பற்றியதாக இருக்கலாம் என்கிறார்கள்.

மேலைக் கோவில் (குடுமியாமலை), திருமெய்யம், திருகோகர்ணம், மலையக் கோவில் நான்குமே மகேந்திர வர்மன் காலத்துக் குடைவரைக் கோயில்கள்தாம். நார்த்தா மலையில் மேல மலையில் உள்ள குகைக் கோவில் - பழியிலி ஈசுவரம் என்பதை முதலாம் மகேந்திரவர்மனின் சமகாலத்தவனான சாத்தன் பழியிலி என்பவன் குடைந்து உருவாக்கியதாக ஒரு கல்வெட்டுச் செய்தி உள்ளது.

கொடும்பாளூர் மூவர் கோயில்தான் மிகவும் பழைமை யானது. கொடும்பாளூர் வரலாற்றில் மிகுந்த சிறப்பான இடம் பெற்ற நகரம். சோழர்கள் காலத்தில் மிகவும் புகழ் பெற்ற வாணிக மையமாகத் திகழ்ந்திருக்கிறது இது. சோழர், பாண்டியர் காலங்களில், ஸ்ரீலங்கா, பர்மா, இந்தோனேஷியா, சீனா, பெர்சியா போன்ற நாடுகளோடு வாணிகத் தொடர்பு இருந்திருக்கிறது.

# 8. தேர்கள் ஓடிய திருத்தலம்

அருள்மிகு பிரகதம்பாள் உடனுறை கோகர்ணேசுவரர் திருக்கோயில் அமைந்துள்ள வடக்கு வீதியில் வரிசையாக, அற்புதமான மரச் சிற்ப வேலைப்பாடுகளோடு கூடிய ஐந்து தேர்கள் உண்டு. இப்போது இவை வீதி வலம் வரும் நிலையில் இல்லாமையால் கூரை வேயப்பட்டு மூடி வைக்கப்பட்டுள்ளன.

திருக்கோயில் நுழைவாயிலுக்குச் சற்று முன்னால் இடப்புறத்தில் சுவாமி தேர் நிற்கிறது. இதற்கு மேற்கில் சற்றுத் தொலைவில் அம்மன் தேரும், அதை அடுத்துக் கடைசியாக, பெரியகுளக்கரை மீனாக்ஷியம்மன் ஆலயத் துக்கு எதிரில் சண்டேசுவரருக்காக ஒரு குட்டித் தேரும் நிற்கின்றன. ஆலய நுழை வாயிலுக்கு வலப்புறம் முதலில் சுப்பிரமணியர் தேரும், அதற்குக் கிழக்கில் சற்றுச் சிறியதான பிள்ளையார் தேரும் நிற்கும்.

சுவாமி தேரும் அம்மன் தேரும் பதினேழாம் நூற் றாண்டில் பல்லவராயர்களால் செய்யப்பட்டன என்றும், விநாயகர், சுப்பிரமணியர், சண்டேசுவரர் - ஆகியோரின் மூன்று தேர்களும் பிற்காலத்தில் தொண்டைமான் மன்னர் களால் செய்யப்பட்டன என்றும் சொல்கிறார்கள். ஆனால் பல்லவராயர்கள் காலத்துக்கு முன்பே இத்தலத்தில் தேரோட்டம் நிகழ்ந்திருக்கிறது.

இரண்டாம் குலோத்துங்கச் சோழன் காலத்தில் வாழ்ந்த தில்லைக்காளி என்னும் பெண்மணி, ஒரு தேரோடும் வீதியை உருவாக்கியிருக்கிறார். த்வார சமுத்திரம் என்னும் ஹொய்சாளர்களின் பகுதியைச் சேர்ந்தவர் இந்தப் பெண்மணி. தென் கவிர் நாட்டில் குடியேறிய குழுவைச் சேர்ந்தவர் என்பதால் மன்னருக்கு இவர் மீது நிறைந்த மதிப்பு உண்டு. இந்தத் தில்லைக் காளி தேரோடும் வீதியைத் தவிர, ஒரு குளம், பெரிய மதகு ஒன்று, ஒரு நந்தவனம், பல நீர்ப்பாசன வாய்க்கால்கள், கிணறுகள் எல்லாவற்றையும் உருவாக்கியதாக என். எஸ். இராமஸ்வாமி என்பவர் எழுதி, புதுக்கோட்டை மாவட்ட ஆட்சியாளர் வெளியிட்டுள்ள 'புதுக்கோட்டை மாவட்டத் தொல்பொருள் வழிகாட்டி' என்னும் ஆங்கிலக் கையேட்டில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

இப்போது உள்ள, மைய மண்டபத்தோடு கூடிய சதுர வடிவமான தெப்பக்குளம் தான் தில்லைக் காளி அகழ்ந்து உருவாக்கியதா என்பது தெரியவில்லை. பெரியகுளம் என்று வழங்கப்படுகிற இந்தத் தெப்பக் குளத்தில், தெப்பத் திருவிழா ஏதும் நடைபெற்றதாகவும் தெரியவில்லை.

புதுக்கோட்டை, திருகோகர்ணத்தில் பிறந்தவன் என்னும் முறையில், எனக்கு நினைவிலுள்ள அறு பதாண்டுக் காலத்திலும், அதற்கு முன் என் தந்தை மற்ற பெரியவர்கள் சொல்லக் கேட்ட வகையிலும், இந்தப் பெரிய குளம் என்றும் அழகான தெப்பக் குளம் உரிய பயன்பாடின்றி குளியலுக்கு மட்டும் பயன்பட்டு வருகிறது.

திருக்கோயிலின் தெப்பத் திருவிழா, அம்மன் சந்நிதிக்கு எதிரே குதிரை வீரர்கள் சிலைகள் உள்ள, மகா மண்டபத்துக்குக் கிழக்கில் உள்ள மங்கள தீர்த்தத்திலேயே நடைபெற்றதுண்டு.

சித்திரை மாதம் ஐந்து தேர்களும் ஓடும். ஆடி மாதம் அம்மன்தேர் உட்பட நான்கு தேர்கள் மட்டுமே திருவீதி வலம் வரும். ஆடித்திருவிழா நிறைவின் போது, அம்பிகையை வெள்ளியாலான ரதத்தில் வைத்து வீதியுலாக் கொண்டு வருவது கண் நிறைந்த, மனம் நிறைந்த காட்சியாக இருக்கும். அதை 'ஆடித்தபசு' என்று வழங்கு வார்கள்.

அன்றைக்கு இரவில் அம்பிகையின் திருக்கல்யாண வைபவம் நிகழும். திருக்கல்யாணம் ஆனதும் சுவாமியும் அம்பாளும் வீதியுலா வருவார்கள்.

செல்வாக்குள்ள தொண்டைமான் மன்னர்களின் பராமரிப்பில் இருந்த திருக்கோயில் என்பதால், வெள்ளி ரதம் உட்பட, ரிஷபம் (காளை) குதிரை, யானை, ஸிம்மம், நாகர் என்று பல வகையான வாகனங்கள் வெள்ளியிலேயே உண்டு. சுவாமிக்கு அளவில் பெரியதாகவும், அம்மனுக்குச் சற்றுச் சிறிய அளவிலும் இந்த வாகனங்கள் உண்டு.

தேர்கள் தவிர, பனங்கைகளால் அவ்வப்போது கட்டி உருவாக்கப்படும் தேர்களும் உண்டு. இவற்றைச் சப்பரங்கள் என்று வழங்குவர். சித்திரையில் ஐந்து சப்ரங்கள் வீதியுலா வரும். புரிஜகந்நாதர் தேரோட்டத்தை நினைவு படுத்துகிற மாதிரி ஆடியில் மூன்று திருமேனி களுக்கும் பக்கம் பக்கமாக ஒன்றாக இணைந்த சப்பரம் தொம்பைகள் அசைந்து ஆட அசைந்து வருவது மிக அழகாக இருக்கும். மையப்பகுதியில் அம்பாளும், இடப் புறம் சுப்பிரமணியரும், வலப்புறம் விநாயகரும் வீற்றிருக்க, பின்னால் தனிச் சப்பரத்தில் சண்டேசுவரர் எழுந்தருளி வீதி வலம் வருவார்.

இந்த முக்கூட்டுத் தேருக்கு 'வண்டியூர்ச் சப்பரம்' என்று பெயர் வழங்கியது. வண்டு ஊர்வது போல் நகரும் தேர் ஆனதால் 'வண்டூர்ச் சப்பரம்' எனிலும் பொருந்து வதே.

சித்திரையிலும் ஆடியிலும் ஆறாம் நாள் திருவிழாவில் சப்பரங்களும், ஒன்பதாம் நாள் திருவிழாவில் தேர்களும் ஓடும். மங்களாம் குளத்தில் நடைபெறும் தெப்பத் திரு விழாவிலும், சப்பரம் போன்ற அமைப்பே மிதந்து சுற்றி வரும்.

பக்கத்தில் உள்ள திருவப்பூரில் நடைபெறும் தேர்த் திருவிழாவுக்கும், திருகோகர்ணத்தில் உருவாக்கப்படும் ஒற்றைச் சப்பரத்தையே கொண்டுபோய், அங்கே முத்து மாரி அம்மனை வீதியுலாக் கொண்டு வருவார்கள்.

அடுத்துத் தைப்பூசத் திருவிழாவும் வெகு விமரிசை யாய்க் கொண்டாடப்பட்டு வந்தது. திருகோகர்ணத்துக்குத் தென்புறத்தில் ஆறு கி.மீ. தொலைவில் 'ஓடும்' வெள் ளாற்றின் கரையில் சுற்று வட்டாரத்தில் உள்ள ஏழு திருக்கோவில்களின் சுவாமி, அம்பாளின் உற்சவத்திரு மேனிகளும் எழுந்தருளித் தீர்த்த வாரி என்று மங்கல விழாக் கொண்டாடுவார்கள்.

பிரதானமாகத் திருகோகர்ணம் அன்னை பிரகதம்பாள் - கோகர்ணேசுவரருடன், சாந்தநாதர் கோவில், திரு வேங்கை வாசல், வெள்ளனூர், திருமயம், விராச்சிலை, கோட்டூர் ஆகிய ஆறு சிவாலயங்களின் உற்சவத் திருமேனி களும் வரிசையாக வெள்ளாற்றங்கரையில் அணிவகுத்த மாதிரி நின்று அருள்பாலிப்பார்கள். வெள்ளாற்றின் தீர்த்த வாரிக் கரைக்குப் 'பூசத்துறை' என்றே பெயர். இத்

திருக்கோவிலில், எல்லாப் புகழ்பெற்ற சிவாலயங்களைப் போன்றே பிரதோஷ வழிபாடு சிறப்பிடம் பெறுகிறது.

இத்திருக்கோவிலில் நவகிரகத் திருமேனிகள் என்கிற அமைப்பு இடம் பெற்றிருக்கவில்லை. மாடிக் கோவிலில் சந்திரன், சூரியன் ஆகிய இருவரின் திருமேனிகள் மட்டுமே உண்டு. மேற்கில் பெரிய குளக்கரையில் உள்ள மீனாக்ஷி சுந்தரேசுவரர் கோயிலில் நவகிரக வழிபாடு சிறப்பிடம் பெறும் இதைச் சின்னக்கோயில் என்று வழங்கினாலும், 'சனீசுவரன் கோயில்' என்றே வழங்குகிறவர்களும் உண்டு.

ஆண்டு முழுமையுமே திருவிழா என்னும் படி வெகு சிறப்போடு விளங்கிய திருத்தலம் இது. காலமாறு பாட்டால் முன் போல் அத்தனை விழாக்கள் நடைபெற முடியாமல் போய்விட்டது.

எனினும் உள்ளூர் அன்பர்களின் முயற்சியால், வெகு சிறப்பாக அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் அண்மையில் ((24.06.2005) நடைபெற்றுள்ளது. மீண்டும் பழைய பொலிவோடு திருவிழாக்கள் களை கட்டிச் சிறப்புற்று நாடும் நகரமும் பொலிவடைய வேண்டும் எனப் பிரார்த்திப்போம்.

## 9. குடைவரைக் கோயில் அழகுகள்

குடை வரைக் கோயில்கள் என்பவை, செயற்கையான கட்டுமானங்கள் இல்லாமல், முழுமையான பாறைப் பகுதியை அப்படியே குடைந்து மண்டபங்கள், இறைவன் திருமேனிகள் என்று உருவாக்கப்படுபவை. மாமல்ல புரத்தில் உள்ள கல் தேர்கள் மற்ற கலை வடிவங்கள் இப்படி மலைகளைக் குடைந்து உருவாக்கப்பட்டவை. இந்தக் கலையைப் பேணி வளர்த்தவர்கள் பல்லவ மன்னர்கள்.

திருகோகர்ணம் அருள்மிகு பிரகதம்பாள் கோயிலுக்குச் சென்றால், கோகர்ணேசுவரர் சந்நிதி இப்படிப் குடைவரைக் கலையில் உருவாகியிருப்பதைக் கண்டு மகிழலாம்; பிரமிப் படையலாம்.

இது உருவான காலம் ஏழாம் நூற்றாண்டு. (கி.பி. 600 630) என மதிப்பிட்டிருக்கிறார்கள். இதே போன்ற குடைவரைக் கலைச் செல்வங்களைப் புதுக்கோட்டை நகருக்கு அருகேயுள்ள சித்தன்னவாசலிலும், குடுமியா மலை, திருமயம் போன்ற இடங்களிலும் காணலாம்.

சித்தன்னவாசல், குடுமியாமலை இரண்டும் மலை களின் உயரப் பகுதியில் குடையப் பட்டவை. ஆனால் திருகோகர்ணம் கோகர்ணேசுவரரின் கருவறை, மலைச் சரிவில் உருவாக்கப்பட்டிருக்கிறது.

நடுவில் தனி அறையில் உருளை வடிவிலான பெரிய சிவலிங்கம் வடிக்கப்பட்டிருக்கிறது. அதற்கு முன்னால் உள்ள மண்டபப்பகுதியில் இடப்புறச் சுவரில் விநாயகரும், வடப்புறச் சுவர்ப் பகுதியில் கங்காதரமூர்த்தியும் நல்ல ஆகிருதியுடன், அழகுடன் வடிக்கப்பட்டிருக்கிறார்கள். கங்காதரர், தன் செஞ்சடைக் கற்றையை இடக்கரத்தால் கோதியவாறு நிற்கும் அழகு, கண்டு ஆனந்திக்கப்பட வேண்டிய பேரழகு. இந்த மண்டபப் பகுதி முழுவதும் நான்கு தூண்களின்மீது அமைந்துள்ளது போல் குடைந்து உருவாக்கப்பட்டிருக்கிறது.

இறைவனுக்கு முன்புறம் அமைந்துள்ள நந்தி மேடைப் பக்கமாக நின்று, தூண்களுக்கு மேலே நிமிர்ந்து பார்த்தால் குடைவரைக் கருவறை உருவாகியுள்ள பாறை யின் வெட்டுச் சரிவு நன்றாகத் தெரியும்.

சந்நிதியின் இடப்புறம் உள்ள சுவரைக் கற்பனையால் விலக்கி விட்டுப் பார்த்தால், விநாயகர் திருமேனிக்குப் பின்புறமாகவும் பாறைச் சரிவு நீண்டிருப்பதைக் காணலாம். இந்தப் பாறைச்சரிவின் அடிப்புறத்தில், தரையோடு ஒட்டியதுபோல் ஏழு பெண் தெய்வங்களின் திரு வுருவங்கள் குடைவரைக் கலையாகச் செதுக்கப்பட்டிருக் கின்றன.

இடப்புறம் வீரபத்திரர் திருமேனியும், வலப்புறக் கோடியில் விநாயகர் திருமேனியும் விளங்க, இடையில் 'ஸப்த கன்னிமார்கள்' அல்லது 'ஸப்த மாதாக்கள்' என்னும் திருநாமத்தோடு ஏழு பெண் தெய்வங்களின் திருமேனிகள் வடிக்கப்பட்டுள்ளன. பைரவி, இந்திராணி, மாகேஸ்வரி, நாராயணி, வராஹி, கௌமாரி, பிடாரி - என்ற இந்த ஸப்த மாதர்களின் திருமேனிகள் வெகு நுட்பமான சிற்ப

வேலைப்பாடுகள் உடையவை. இவற்றைக் குனிந்து பள்ளத்துக்குள் பார்த்து நுட்பங்களை அனுபவிப்பது அவ்வளவு எளிதானதல்ல. போகிற போக்கில் 'ஸப்த கன்னிமார்கள்' என்று ஒரு கும்பிடு போடுவிட்டுப் போகிற அன்பர்கள் இனியாவது சற்று நின்று நிதானித்து, இந்த ஏழாம் நூற்றாண்டுக் கலைச் செல்வங்களை தரிசித்து அருள் பெற வேண்டும்.

இந்தச் சிற்ப வடிவங்கள் ஏழாம் நூற்றாண்டுப் பல்லவர்களின் கலைப்பணிகளாக இருந்த போதிலும் இந்தக் கருவறைகளை உள்ளடக்கிய மண்டபப் பகுதிகள் பதினோராம் நூற்றாண்டுச் சோழர்களின் கலைப்பணி என நம்பப்படுகிறது.

கி.பி. 1012 இல் அரசுரிமையேற்ற பரகேசரி முதலாம் ராஜேந்திரச் சோழன் காலத்தில் இந்த பிரகதம்பாள் திருக்கோயில் எடுப்பிக்கப்பட்டிருக்கலாம் என்கிறார்கள்.

எந்தக் கோவிலிலும் இல்லாத ஒரு வியப்பாக, திருகோகர்ணம் திருக்கோயிலில் தான் மாடிப்பகுதி என்ற மேல் தளத்திலும் தெய்வத்திருமேனிகள் இடம் பெற்றுள்ளன. இந்த மாடிப்பகுதியில் முதலாம் ராஜேந்திரன் காலக் கல்வெட்டு ஒன்றும் உள்ளது. இது மாடியில் முருகன் வள்ளி தேவஸேனாவுடன் எழுந்தருளியுள்ள திருக்கோவிலுக்குத் தென்புறம் உள்ள பாறைச்சரிவில் காணப்படுகிறது.

கட்டுமானங்கள் இல்லாமல் பார்த்தால் கோகர்ணேசுவரர், சப்த கன்னிமார் திருமேனிகள் உருவாக்கப்பட்டுள்ள பாறையின் மேல் பகுதியில் இக்கல்வெட்டு அமையும். முருகன் கோவிலை ஒட்டி வடபுறச் சுவருக்கு அப்பால் பாறை நீண்டு உயர்ந்திருக்கிறது. மேற்குப் புறப்பாறைப் பிளவில் சுனை, வற்றாத நீர்வளத்தோடு விளங்குகிறது.

பாறையின் உயரப்பகுதியில் நாகர் திருமேனிகள் இடம் பெற்றுள்ளன.

மாடிப்பாறை இராசேந்திரன் காலக் கல்வெட்டில், காணப்படும் செய்தி சுவையானது. திருகோகர்ணம் நகருக்குத் தென்புறம் அமைந்துள்ள திருவெட்பூர் (இன்றைய திருவப்பூர்தான்) வேளான் வெண்காடன் என்னும் சிற்றரசனின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. இவன் முதலாம் ராஜேந்திரனுக்குக் கட்டுப்பட்ட குறுநில மன்னன்.

இந்த வேளான் வெண்காடன், திருகோகர்ணம் சிவாலய அர்ச்சகருக்கு ஒன்பது பொற்காசுகள் தந்து, அதன் மூலம், பங்குனித் திருநாள் ஏழு நாட்களும் எழுந்தருளும் தேவர்க்கும் பிராட்டியாருக்கும் பிடியமுது செய்விக்க வேண்டும் என்று ஆணையிட்டிருக்கிறான்.

'தேவர்க்கும் பிராட்டியாருக்கும்...' என்று இந்தக் கல்வெட்டில் இருப்பது மிகவும் முக்கியமான குறிப்பு, குடைவரையில் சிவ பெருமானும், கங்காதரர், விநாயகர், ஸப்த கன்னிமார் திருமேனிகள் மட்டுமே இடம் பெற்றுள்ளன. 'பிராட்டியார்' என்று குறிப்பிடப் படும் சக்தி வடிவம் அங்கு இல்லை.

அவ்வாறாயின் அந்தப் பிராட்டியார் திருமேனிதான் இப்போது தலைமைப் பீடமாக விளங்கும் அருள்மிகு பிரகதம்பாள் திருமேனியாக இருக்க வேண்டும். அன்னை பிரகதம்பிகையின் கலை வடிவம் அத்தனை உயர்வான தாய்க் காணப்படுகிறது.

குடைவரையாக அம்பிகை திருமேனி அமையாத போதிலும், கருவறைக்குப் பின்னால் சில மீட்டர்கள்

அருகிலேயே, திருச்சுற்றின் இடப்புறத்தில் மலைப்பாறைச் சரிவு தொடங்கி விடுவதை வைத்து, பிராட்டியார் திருமேனியையும் முதலில் உருவாக்கப்பட்ட ஒன்றாகவே கருத இடமிருக்கிறது.

திருத்தலத்தின் பழைய பெயர் வகுளாரண்யம். மகிழவனக்காடு, திருத்தலத்தின் வழிபாட்டுக்குரிய மரம் 'தலவிருட்சம்' மகிழ மரம். கோயில் கட்டுமானத்தின் கிழக்குப்புறம் உள்ள, பாறையை அப்படியே படிகளாகவும் செதுக்கியுள்ள திருக்குளத்தின் பெயர் மங்களாங்குளம். அல்லது மங்கள தீர்த்தம். மலைச்சுனையிலிருந்து ஆலயத் துக்குத் தண்ணீர் கொண்டு வருவதற்காகப் பயன்படிருக்கக் கூடிய படிக் கட்டுகள் மாடிப்பகுதியின் கிழக்குப் பகுதியில் சூர்ய சந்திரர், பைரவர்கள் உள்ள கருவறையின் இடப்புறம் சரியும் பாறையில் தொடங்கி மங்கள நாயகி கருவறைக்குப் பின்புறம் வரவேண்டும்.

மலைப்பாறைக் குடைவரைக்குத் தென்புறம், கிழக்கு நோக்கிய ஒரு சிவலிங்கம் வகுளவனேஸ்வரர் என்றும், தெற்கு நோக்கி உயரமான மேடைமீது கோயில் கொண் டுள்ள அம்பிகை மங்கள நாயகி என்றும் வழங்கப்படு கிறார்கள். இந்தச் சிவலிங்கத்தின் மீது காமதேனுப் பசுவின் கால் தடங்கள் பதிந்திருப்பதாகவும் கூறுவார்கள்.

இந்த அடிப்படைகளை வைத்துப் பார்க்கும்போது, குடைவரை உருவாவதற்கு முன்பே, தலப் பெருமை காரணமாக, மகிழவனக்கடவுளும், மங்கள நாயகியும், தல விருட்சமும், திருக்குளமும் ஏற்பட்டிருக்கலாமோ என எண்ணத் தோன்றுகிறது.

ஆர். பஞ்சநதம் பிள்ளை என்பவர் எழுதி திருக்கோ கர்ணம் தேவஸ் தானத்தார் 1979-இல் வெளியிட்டுள்ள தல

வரலாற்று நூலிலும் இந்த 'மகிழவனேசுவரரே கோயிலின் புராதன மூர்த்தியாகச் சொல்லப்படுகிறது' எனக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

இந்த வகுளவனேசுவரர் திருக்கோயிலை அப்படியே வைத்துச் சோழர் காலத்தில் பரவலான விரிவாக்கம் நிகழ்ந்திருக்கிறது.

மகிழவனேசுவரருக்கு எதிரில் உள்ள நந்திதேவரின் உருவத்தில் ஹொய்சளர்களின் கலைவடிவம் காணப்படுவதாகச்சொல்லி, இது அவர்கள் காலத்தில், பதின்மூன்றாம் நூற்றாண்டில் கட்டப்பட்டுள்ள கோவில் என்றும் கூறப்படுகிறது.

பதினைந்தாம் நூற்றாண்டில் விஜயநகரப் பேரரசர்கள் காலத்தில் கட்டப்பட்ட மண்டபத்துள் அடங்கியவாறு உள்ள மகிழவனேசுவரர், மங்கள நாயகி ஆலயங்களைப் பதினெட்டாம் நூற்றாண்டில் தொண்டைமான் மன்னர்கள் கட்டியதாகவும் நம்பப்படுகிறது.

பக்தியோடு வலம் வருகிறவர்களுக்கு இந்தக் கால ஆராய்ச்சியெல்லாம் தேவையுமில்லை. அவசியமும் இல்லை. எனினும் ஒரு பழைமையான சிவாலயத்தின் வரலாறு பற்றிக் ஓரளவுக்கேனும் தெரிந்து கொள்வதில் தவறில்லையல்லவா?

கோகர்ணேஸ்வரர் திருமேனி உள்ள குடைவரைப் பாறையில், தென்புறத்தில், கிரந்தமொழி எழுத்துக்களில் 'ஸ்தாபனாச்சார்யோ பக்தாச்சார்யஹ' என்று உள்ளது. இதன் பொருள் "இதனை உருவாக்கியவர் பக்தாச்சார்யன்" என்கிற மாதிரி அமையும். இவன் யார்? தலைமைச் சிற்பியா, அல்லது யாராவது மன்னன் பெயரா என்பது தெரிய

வில்லை. சிற்பக்கலை, படிமக்கலை போன்ற நூல்கள் வடமொழி இலக்கியங்களாகவே உள்ளன என்பதால், சிற்பக்கலைஞர்கள் அனைவருமே வடமொழியில் புலமை பெற்றிருந்தவர்கள் தாம். எனவே, இந்த கிரந்த மொழி எழுத்துக்கள் தலைமைச் சிற்பியின் கைவண்ணமாக இருத்தலும் சாத்தியமே.

இந்தக் கல் வெட்டு பல்லவ கிரந்த வடிவப் பாணியில் உள்ளது. இதன் காலம் கி.பி. 600 - 630 என்கிறார்கள். இதற் கடுத்த கல்வெட்டு கி.பி. 765 ஆம் ஆண்டுக்குரியதாய் நிர்ண யிக்கிறார்கள். பாண்டிய மன்னன் ஜடில பராந்தக நெடுஞ்சடையன் என்பவன் ஆட்சி பீடமேறிய பதி னேழாவது ஆண்டில் இக்கல்வெட்டு பதிவாகியிருக்கிறது.

தொடர்ந்து முதலாம் ஆதித்த சோழன், முதலாம் ராஜராஜன், முதலாம் ராஜேந்திரன், முதலாம் குலோத் துங்கன், மூன்றாம் ராஜராஜன், மாறவர்மன் குலசேகர பாண்டியன், முதலாம் மாறவர்மன் வீரபாண்டியன் போன்ற மாமன்னர்களின் காலக் கல்வெட்டுக்கள் ஆங்கங்கே பாறைச்சரிவுகளிலும், சுவர்ப்பகுதிகளிலும், தூண்களிலும் காணப்படுகின்றன.

இக்கோவிலில் உள்ள பதினாலாம் நூற்றாண்டுக் கல்வெட்டு ஒன்றில் (மாறவர்மன் குலசேகர பாண்டியன்(?) கி.பி. 1314 - 1362) 'புதுக்கோட்டை' என்ற பெயர் காணப் படுகிறது.

... வடபாற்கெல்லை உடையார்
சாந்தாரைக் காத்த நாயனார் தேவதான
... ரைச் செய்க்கும் உடை... னம்

பட்டன் வயக்கலுக்கும் புதுக்கோட்டை
இளையிலி ... த்து ... வை ...

என்று வரும். (புதுக்கோட்டைக் கல்வெட்டு எண் - 649)

இன்னொரு கல்வெட்டுச் செய்தியில் 'திருவெட்பூர் கீழை மதிளுக்கும்' என்று பதிவாகியுள்ளது. இதை வைத்து, அங்கும் ஒரு கோட்டை, கோட்டை மதில் இருந்திருப்பதை அறிய முடிகிறது. பதினோராம் நூற்றாண்டில், திருவப்பூரைத் தலைமைபீடமாகக் கொண்டு வேளாண் வெண்காடன் என்னும் குறுநில மன்னன் ஆண்ட செய்தியையும் முன்னமே பார்த்தோம்.

# 10. நகரமைப்பில் ஒரு சாதனை

தமிழ்நாட்டின் நகரங்களிலேயே மிகவும் சீரான சாலை அமைப்புக்குப் புகழ் பெற்ற நகரம் புதுக்கோட்டை. சுற்றிலும் காடுகள் சூழ்ந்த நகரம் என்ற காலம் போய், இப்போது எங்கு பார்த்தாலும் கட்டடங்கள் என்றாகி விட்டது.

நகரத்தின் கிழக்குப் பகுதியில் கலச மங்கலம் என்று வழங்கப்பட்ட முக்கியமான இடத்தில் நகரத்தார் குடியேறி யிருக்கிறார்கள். மேற்குப் பகுதியில் சிங்க மங்கலம் என்றொரு பகுதி விளங்கியதுண்டு. இவை எப்படி, எதனால் வழக்கொழிந்து போய்ப் புதுக்கோட்டையாக மாறியது என்பது தெரியவில்லை. அத்துடன் எந்தக் கோட்டையை வைத்து இந்த நகரம் புதுக்கோட்டை என்னும் பெயர் பெற்றது என்பதையும் அறிய முடிய வில்லை.

1732 - 1734 ஆண்டுகளில் சந்தாசாகிப் அல்லது ஆனந்த ராவ் படையெடுத்து வந்த போது கோட்டைப் பகுதிகள் இருந்து அழிக்கப்பட்டிருக்கலாம் என்றும் கருதப்படுகிறது.

இப்போதைய நகரமைப்பு பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் உருவானது. அதற்கு முன்னால், நகரை ஒழுங்கில்லாத சாலைகளும். கூறைக் குடிசைகளும் மண் சுவர் வீடுகளுமே சூழந்திருக்கின்றன. ஒரு பயங்கரமான தீவிபத்தில் ஏறக்குறைய எல்லாமே நாசமான நிலையில் அப்போதைய மன்னர் ராஜா விஜய ரகுநாதத் தொண்டைமானும், வெள்ளைக்கார நிர்வாக அதிகாரியான காப்டன் வில்லியம் பிளாக்பர்ன் என்பவரும் சேர்ந்து புதியதாக உருவாக்கியது தான் இன்றைய புதுக்கோட்டை.

மையத்தில் மன்னரின் அரண்மனை - சுற்றிலும் நான்கு பிரதான வீதிகள்- இவற்றை ராஜவீதிகள் என்று வழங்கு கிறார்கள். கிழக்கு ராஜவீதி, மேல ராஜவீதி, தெற்கு ராஜவீதி, வடக்கு ராஜவீதி என்றும் நான்கு பிரதான வீதிகளை அடுத்து அடுக்கடுக்காக, கீழ இரண்டாம் வீதி, கீழ மூன்றாம் வீதி என்று ஒழுங்கான சாலைகள் அழகுற அமைக்கப்பட்டன.

அதன் பின்னர், சமஸ்தான திவானாகப் புகழோடு விளங்கிய சேஷையா சாஸ்திரியாரின் முயற்சி - வழி காட்டலால், நகரம் மேலும் விரிவடைந்து பெருமை பெற்றது. சுற்றுப்புறக் காடுகளிலிருந்து பெருகி ஓடிய 11.5 கோடி காலன் மழை நீரைச் சேமித்து வைக்கும் படியான புதுக்குளம் என்னும் நீர் நிலை ஆழப்படுத்தப்பட்டுச் சீரமைக்கப்பட்டதும், புதுக்கோட்டையின் 'அடையாளப் பெருமை'யாக விளங்கும் 'பப்ளிக் ஆபீஸ்' கட்டடங்கள் உருவானதும் திவான் சேஷையா சாஸ்திரிகளின் கூர்த்த மதியினால் தான் என்பதை நன்றியோடு நினைவு கூர வேண்டும்.

புதுக்கோட்டை நகர் எல்லைக்குள் உள்ள முக்கியமான திருக்கோவில்களின் விவரம்.

1. திருகோகர்ணம் அருள்மிகு பிரகதம்பாள் உடனுறை கோகர்ணேசுவரர் திருக்கோவில்.
2. புதுக்கோட்டை சாந்தநாத சுவாமி திருக்கோவில்
3. வரதராஜப்பெருமாள் கோயில் (கீழ மூன்றாம் வீதி)
4. வேங்கடேசப் பெருமாள் கோயில் (அய்யர் குளக்கரை)
5. அரிய நாச்சியம்மன் கோவில்
6. மனோன்மணியம்மன் கோவில்
7. காமாக்ஷியம்மன் கோவில்
8. திருவப்பூர் அருள்மிகு மாரியம்மன் கோவில்
9. திருவப்பூர் வேணுகோபால சுவாமி கோவில்
10. பொற்பனையான் கோவில்
11. தடிகொண்ட அய்யனார் கோவில்
12. சிங்கமுத்து அய்யனார் கோவில்
13. திருவப்பூர் செல்லியம்மன் கோவில்
14. திருகோகர்ணம் மீனாக்ஷி சுந்தரேசுவரர் கோயில் (சின்னக் கோவில்)
15. புதுத்தெரு, ஆஞ்சநேய சுவாமி கோவில்
16. அண்மையில் உருவான ஸ்ரீ புவனேஸ்வரி ஆலயம் (கீழ ஏழாம் வீதி)
17. கிரிவலப் பாதையில் உள்ள முருகன் கோவில் (அண்மைக்காலத்தது)

# 11. வேங்கையாய் வழிமறித்த ஈசன்!

புதுக்கோட்டையிலிருந்து திருச்சிராப்பள்ளி செல்லும் சாலையில், ஐந்தாவது கி.மீ. 'திருவேங்கை வாசல்' என்னும் சிறிய மைல் கல்லைப் பார்த்து இடப்புறம் திரும்ப வேண்டும்.

'வியாக்ர புரீஸ்வரர்' திருக்கோயிலை அடையலாம். புகழ்பெற்ற தொண்டைமான் மன்னர்களின் குலதேவதை யாக விளங்கிய, திருகோகர்ணம் அருள்மிகு பிரகதம்பாள் - கோகர்ணேசுவரர் திருத்தல வரலாறோடு தொடர்புடையது இந்த 'வியாக்ரபுரி' என்னும் திருவேங்கை வாசல்.

பண்டை நாட்களில் மகிழ மரங்கள் அடர்ந்த காட்டில் இருந்தவர் மகிழவனேசுவரர் என்றும் வகுளவனேசுவரர் என்றும் வழங்கப்படும் சிவபெருமான். இவர்தான் திருகோ -கர்ணம் திருத்தலத்தின் பழைமையான மூலமூர்த்தி.

சாப விமோசனத்துக்காகத் தன் காதுகளில் கங்கை நீரை எடுத்து வந்து தினமும் அந்த ஈசனுக்கு அபிஷேகம் செய்து வந்தது காமதேனுப் பசு. அப்படி வந்த பசுவின் பக்தியை சோதிப்பதற்காக மகாதேவர், வேங்கையாக உருவெடுத்துப் பசுவை வழிமறித்த தலம் தான் திருவேங்கை வாசல் என வழங்கப்படுகிறது.

திருகோகர்ணம் அருள்மிகு பிரகதம்பாள் கோகர் ணேசுவரரை தரிசிக்கும் அன்பர்கள் சிரமம் பாராமல், இந்தத் திருக்கோவிலுக்கும் வந்து சுவாமியையும்

அம்பிகையையும், தரிசித்துச் செல்வது பெரும் பயன் நல்குவதாய் இருக்கும்.

'வேங்கை-வாசல்' என்னும் சொற்களே தலப் பெருமையை விளக்கப் போதுமானவை. இந்தத் தலத்து இறைனின் திருநாமம் 'வ்யாக்ர புரீசுவரர்' அல்லது தமிழில் 'திருவேங்கை நாதன்.' அம்பிகையின் பெயர் அருள்மிகு பிரகதாம்பாள். தமிழில் பெரியநாயகி. நின்ற திருக்கோலம்!

மூலவர் வேங்கைவன நாதர் சிறிய சிவலிங்க வடிவில் அருள்பாலிக்கிறார். அர்ச்சகர் காட்டும் தீபாராதனை ஒளியில் கூர்ந்து பார்த்தால் அதில் இறைவனின் 'வேங்கை' வடிவத்தைக் கண்டு பிரமிப்படையலாம். சிவலிங்கத்தின் மேல் பகுதியில் வட்டமான இரண்டு வேங்கைக் கண் களையும், ஆக்ரோஷமாய்த் திறந்துள்ள வேங்கையின் வாய்ப்பகுதியையும் கண்டு ஆனந்தித்து அருள்பெறலாம்.

இருபத்தோரு கல்வெட்டுக்கள் இந்தத் திருக்கோவி லில் உள்ளன. இவற்றில் மிகவும் பழைமையானது கி.பி. 1011 இல், முதலாம் ராஜராஜன் காலத்தில் பதிவாகியுள்ளது. இக்கல்வெட்டில் ஈசனின் திருநாமம் 'திருமேற்றளிப் பெருமான்' என்பதாக உள்ளது. அடுத்து கி.பி. 1037 இல் பதிவாகியுள்ள கல்வெட்டில் சிவனை "சூடாமணி விடங்கன்" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. பெரும் பாலான கல்வெட்டுக்கள் பூஜைக்கு நிலம் போன்றவை வழங்கிய தகவல்கள் தாம்.

ஆலயத்தின் மகாமண்டபம் சோழர்களின் கட்டு மானம். அம்பிகையின் கருவறை பிற்காலச் சோழர் காலம் அல்லது பாண்டியர்களின் தொடக்க காலம் என்று கருதப் படுகிறது.

விமானம் இரண்டு அடுக்குகளில் உருவாகியுள்ளது. கிழக்கு நோக்கிய திருக்கோயில் இது.

சிவபெருமான் அருள்பாலிக்கும் கருவறையின் வெளிப்புறச் சுற்றில், முப்புறமும் கோஷ்ட தேவதைகள் இருத்தல் மரபு. இத்திருக்கோயிலில், வடபுறம் உள்ள புழை (கோஷ்டம்) வெறுமையாக உள்ளது. மேற்குப் புறப் புழையில் நின்ற திருக்கோலத்தில் மகா விஷ்ணு இடம் பிடித்திருக்கிறார். தென்புறப் புழையை ஒட்டி ஒரு சிறுமண்டபமே எடுப்பித்திருக்கிறார்கள். சிதிலமான கட்டடப்பகுதிகளில் விழுந்து கிடந்திருக்கக் கூடிய தூண்களை வைத்து இதை உருவாக்கியிருக்கிறார்கள்.

இந்தத் தென்புறப் புழையில்தான், திருவேங்கை வாசல் ஆலயத்தின் ஒப்புவமையற்ற சிற்பச் செல்வமான ஞானதட்சிணாமூர்த்தி இடம் பெற்றிருக்கிறார். இவர் மிகவும் அரிதான நுட்பக் கலை வடிவம்.

தட்சிணாமூர்த்தியின் திருக்கோலம் அர்த்தநாரீசுவர வடிவத்தில் காணப்படுகிறது. இடப்புறம் சக்தி வடிவம், வலப்புறம் சிவஸ்வரூபம், எனவே இடப்புறப்பாதம் மடித்து அமர்ந்த நிலையிலும், வலப்புறப்பாதம், பீடத்தில் அமர்ந்து தரையைத் தொடும் நிலையிலும் உள்ளன. 'நின்று அமர் நிலை' என்கிறார்கள். இதை 'உத்குலிக ஆசன' நிலை என்று குறிப்பிடுவார்கள். ஒருமுகச் சிந்தனைக்கு உகந்த நிலை இது.

நான்கு கரங்கள் - ஒன்றில் ஜபமாலை, ஒன்றில் நாகம், ஒரு கரம் சின்முத்திரை காட்டுகிறது. ஒரு கரம் - இடப்புற முன்கரம், கால்வரை நீண்டு வந்து முயலகனின் தலையை வருடுகிறது. இது ஓர் அரிதான தோற்றம். தலையில் ஜோதி

வடிவமும், நடுவில் சிவலிங்கமும் வேறு காணப்படு கின்றன. இவருக்கு வலப்புறத்தில் சிவலிங்க பீட கணபதி சிறிய அளவில் எழுந்தருளியுள்ளார். ஆவுடை கணபதி என்றும் சொல்கிறார்கள்.

“அமைதிப்பதி, பேரானந்தப்பதி,
என்றும் நிறையருள் தரும்பதி
அதிசயப்பதி, ஓங்குவளர் புகழ்பதி
திருவேங்கை வாயிலே...”

என்று தலப் பெருமைப் பாடலைச் சொன்னார் அர்ச்சகர் ஒருவர்.

இந்த ஆலயத்தில் மூலவர், பரிவார தேவதைகள் அனைத்தின் மீதும் சூரிய ஒளி படர்ந்து கொண்டேயிருக்கும் அதிசயம் உண்டு. சந்நிதிக்குக் குறுக்கே யாரும் மறைக்காமல் ‘வழி’ விட்டால் பகலவனின் ஒளி இலேசாக வேனும் பிரதிபலித்துத் திருமேனிகளின் மீது படிகிறது.

திருச்சுற்றில் முருகன் வள்ளி, தேவயானையுடன் தெற்குப் பார்த்து அருள் பாலிக்கிறார். தேவயானையின் கரங்களில் தாமரை மலர் இருக்கிறது. இன்னும் சண்டிகேசு வரர், கால பைரவர், சூரியன், சனீசுவரர் திருமேனிகளும் உண்டு.அம்பிகையின் சந்நிதி தெற்குப் பார்த்து அமைந் துள்ளது. சுவாமியின் எதிரில் உள்ள நந்திக்குத் தென்புறம் ஒரு கம்பம் நிற்கிறது. இதைக் கம்பத்தடிக் கருப்பர் என்னும் கிராமதேவதையாக வழிபடுகிறார்கள். திருக்கோயில் எடுப்பிக்கப்படுவதற்கு முன்னால் வேங்கை வனக் கடவுளுக்குத் துணையாக இருந்த கருப்பர் என்பார்கள்.

திருச்சுற்றின் தென்புறத்தில், கிழக்கு நோக்கி இன் னொரு பிரகதம்பாளின் கருவறையும் உண்டு. இந்தத்

திருமேனியின் வலக்கர விரல் ஒன்று பின்னப்பட்டு விட்டதாகவும், அதனால் இதை வழிபாட்டுக்கு உகந்த தன்று என்று ஒதுக்கி, பக்கத்திலுள்ள திருக்குளத்தில் போட்டு விட்டு வேறு புதிய வடிவத்தை உருவாக்கிய தாகவும், அப்போது அம்பிகையே மன்னன் கனவில் தோன்றி 'உன் குழந்தைக்குக் கொஞ்சம் ஊனமிருந்தால் அப்படியே விட்டுவிடுவாயா? தூக்கி வீசி விடுவாயா?' என்று கேட்டதாகவும், அதன் விளைவாய், மன்னர் அன்னைக்குத் தனிக் கருவறை எழுப்பி அம்பிகையை வைத்து வழிபட்டு வந்ததாகவும் சொல்வார்கள். இந்தக் கோயில் ராஜா ராமச்சந்திரத் தொண்டமான் எடுப்பித்தது; இந்த தேவியைத் தெற்கத்தி அம்பாள் என்கிறார்கள்.

இந்தத் திருக்கோவிலில் முன் காலத்தில் பல விதமான நாட்டுப் புறக் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றுள்ளன. சாந்திக் கூத்து என்று ஒருவகை நடனம் நடைபெற்றதாய்க் கல்வெட்டுச் செய்தி சொல்கிறது. இதற்காக ஒரு பெண்ணுக்கும் நிலம் வழங்கப் பட்டிருக்கிறது.

இந்த அருள்மிகு பிரகதம்பாள் சமேத வியாக்ர புரீஸ்வரர் திருக்கோயிலின் ராஜகோபுரத் திருப்பணித் தொடக்கவிழா அண்மையில் நடைபெற்றுள்ளது. விமான பாலாலய விழா நிகழ்ந்துள்ளது.

வியாக்ரபுரீஸ்வரர் திருக்கோயில் சக்தித்தலம், குருஸ்தலம், சூரிய ஒளிக் கோவில், புற வழிக் கோவில் என்றெல்லாம் புகழப்படுகிறது. நவகிரக தோஷம் அகலவும் இங்கு அன்பர்கள் வந்து வழிபடுகிறார்கள். பசுவை வழிமறித்துப் பரமபதம் தந்த ஈசன் எல்லோருக்கும் நல்வழி காட்டப் பிரார்த்திப்போம்.

# 12. திருவிழாப் பெருமைகள்

| | | |
|---|---|---|
| சித்திரை | : | பத்துநாட்கள் திருவிழா<br>சித்திரா நட்சத்திரத்தில் தீர்த்தவாரி. |
| வைகாசி | : | வசந்தோற்சவம்<br>விசாக நட்சத்திரம் தீர்த்தம் |
| ஆனி | : | டோலோற்சவம்<br>கேட்டை நட்சத்திரம் தீர்த்தம் |
| ஆடி | : | திரு ஆடிப்பூரம், தேர், அம்மன் தபஸ், திருக் கல்யாணம், பூரத்தில் தீர்த்தம் |
| ஆவணி | : | ஆவணி மூலத் திருவிழா, பசுவுக்கு மோட்சம், திருவோணம் தீர்த்தம். |
| புரட்டாசி | : | நவராத்திரி விழா |
| ஐப்பசி | : | கந்த சஷ்டி, சூரசம்ஹாரம் |
| கார்த்திகை | : | கார்த்திகை தீபவிழா |
| மார்கழி | : | ஆருத்ரா தரிசனம் |
| தை | : | தைப்பூசத் திருவிழா,<br>வெள்ளாற்றில் தீர்த்தவாரி |
| மாசி | : | மகா சிவராத்திரி |
| பங்குனி | : | பங்குனி உத்தரம் |

இவைதவிர ஒவ்வொரு மாதமும் 'மாஸபூஜை', அமாவாசை, கார்த்திகை, மாதப்பிறப்பு, ஒவ்வொரு

மாதமும் தேன், தயிர், பால், நெய், சந்தனம், முப்பழம், சர்க்கரை, அதிரசம், தவனம் என்று அபிஷேகங்கள் நடைபெறுகின்றன.

ஒவ்வொரு விழாவுக்கும் சிறப்புக் குழுக்கள் உள்ளன. பிரதோஷ விழாக்குழு, சுக்கிரவார விழாக்குழு, வார வழிபாட்டுக்குக் குழு, தேவாரக்குழு, பௌர்ணமி விழாக்குழு என்று அமைத்துச் சிறப்பாகச் செயல் படுகிறார்கள்.

திருக்கோவில் உள்திருச்சுற்றில் ஒவ்வொரு பிர தோஷம், வெள்ளிக்கிழமைகளில், சுவாமியும் அம்பாளும் வலம் வந்து அருள்பாலிக்கிறார்கள்.

ஒவ்வோர் ஆண்டும் கார்த்திகை மூன்றாம் சோம வாரத்தில் மகிழவனேசுவரர், மங்களநாயகி, கோகர்ணேஸ் வரர், பிரகதம்பாள் சந்நிதிகளில் 108 சங்காபிஷேகமும் ஹோமமும் நடைபெறுகின்றன.

சுக்ரவாரத்தில் அம்பாள் 'ஊஞ்சலில் காட்சியளிக் கிறார்.' தேய்பிறை அஷ்டமியில் பைரவருக்கு சிறப்பு அபிஷேக வழிபாடுகள், வடைமாலை சார்த்துகிறார்கள். அமாவாசைகளில் சப்தகன்னிமார்களுக்கும், சப்தலிங்கம், பிரும்மா, சண்டேசுவரருக்குச் சிறப்பு அபிஷேக வழி பாடுகள் நடைபெறுகின்றன.

ஐப்பசி பௌர்ணமியில் சுவாமிக்கு அன்னாபிஷேகம் சிறப்பாக நடைபெறுகிறது. எல்லாப் பௌர்ணமியிலும் கிரிவலம் நடத்துகிறார்கள்.

ஆடி மாதம் கடைசி வெள்ளியில் திருவிளக்கு பூஜை நடைபெறுகிறது. வியாழக்கிழமைகளில் குருபகவானுக்குச் சிறப்பு வழிபாடு நிகழ்கிறது.

## 13. நந்தவனப் பெருமை

திருக்கோவிலின் தரைப்பகுதியில் 'உடலை' மட்டும் காட்டி, மாடிப்பகுதியில் செழித்துப் படர்ந்து அனை வரையும் கவர்ந்திழுக்கிறது தலப்பெருமை சொல்லும் மகிழமரம்.

ஆலயத்தின் மேற்குப் பகுதியில், மன்னர் ஆட்சிக் காலத்தில் சிறப்புறப் பராமரிக்கப்பட்டுவந்த நந்தவனம் உள்ளது. சில காலம் கவனிப்பாரின்றி, ஏறக்குறையப் பாழ்பட்டுவிட்ட இந்த நந்தவனம் இப்போது சீரான பராமரிப்பில் மீண்டும் பழம்பெருமை பெருமையைக் காண்கிறது.

திருக்கோவிலின் வடபுறம் கோவில்பட்டியில் உள்ள பிடாரியம்மன் ஆலய சித்ரா பௌர்ணமி விழாக் குழுவினரின் முயற்சியால் தேவஸ்தானத்தின் உதவி, நகராட்சி மன்ற உறுப்பினர்கள், பொதுமக்கள் உதவியோடு இது சீரமைக்கப்பட்டுள்ளது.

### நம்பிக்கை :

ஒவ்வொரு நாள் இரவும், நடைபெறும் அர்த்தஜாம பூஜையின் போது, பக்தர்கள் அருள்பெறுகிறார்கள். ஒரு மண்டலம், 48 நாட்கள் தினமும் அம்பாளுக்கு அர்த்தஜாம பூஜையில் பால்வைத்து பூஜை செய்தால் திருமணத் தடை நீங்கும் என நம்பப்படுகிறது.

# 14. அம்பிகையின் மீதான பாடல்கள்

## வினைதீர்க்கும் தாய்!

*வீணை சுப்பராம பாகவதர் பாடியது:*

*இராகம்: புன்னாக வராளி* *தாளம்: சாபு*

பல்லவி

கருணைக் கடைக்கண் பாரம்மா; பாரம்மா
எந்தன் 'கலியும் பிணியும் தீரம்மா!

அனுபல்லவி

தருணமிது அகில புவன முழுதும்
பெற்ற தாயாகி யென்றும் ப்ருஹந்
நாயகி நீ இப்போ... (கருணை)

சரணம்

தஞ்ச மெனக்குன் சரணாரவிந்தம்
சதமென் றுள்ளத்தில் கொண்டேனே
எந்தன் தாழ்வும் உனது பெருவாழ்வும்
தினம்தினம் தானே, தெளிந்துகொண்
டேனே உந்தன் நெஞ்மிரங்கி
எந்தன் சஞ்சலம் தீர்ப்பது நீஎன்ற
சொல்லு விண்டேனே எந்நேரமும்
நீவைக்கும் வரமும் ரக்ஷிக்கும், நிச்சயம்

கண்டுகொண்டேனே அஞ்சலென்ற
வசனம் சொல்லி என்னுடைய
பஞ்சமெல்லாம் படாபஞ்சனம்
செய்திப் போ... (கருணை)

என்ன பிழைகள் பிள்ளை செய்தாலும்
குணமாக எண்ணி நடப்பிக்கும்
பாரம் பெற்ற அன்னைக்குண்டான
பிருதல்லால், மற்றினி யார் செய்வார்
இந்தப் பிரகாரம் இன்னமும் பஞ்சரி
என்னதான் சொன்னாலும் எண்ணாதே
நீ அபசாரம்! நம்பும் ஏழை பங்காளி
நீ என்பதனாலுனக்கென்ன சொல்வேன்
உபசாரம் தாயே தன்மையாகவே என்னை ஆதரிப்பது
பின்னை யார் உலகினில் நின்னையல்லலாது இனி
(கருணை)

பார்புகழ் தேன் கபிலாபுரி மேவிய
பார்வதி, நித்யகல்யாணி, க்ருபாநிதி!
கோகர்ணநாத குணவாரிதி பங்கில்
வளர்ந்திடும் ராணி! ஸ்ரீபெரும்ராய
ரகுநாத ராஜசிகாமணி ஸேல்ய
சர்வாணி! அவர் சிந்தித்த கார்ய
மெல்லாம் கைமேலாகவே நடக்குமே
திருபுவன ராணி பேர் பெரும்
மாமுனி யோர் திருமாலிமையோர்
முதலாய் வினைதீர் ப்ருஹன்நாயகி'' (கருணை)

# பொற்கபிலைவனக் கோகர்ணமே!

அன்னை ஸ்ரீசாயிமாதா
சிவபிருந்தாதேவி

(1)

கங்கையின் நீர் தனைநாளும் சுமந்து திருச்செவியில்
கங்குல்கலை வதன்முன் மகிழ்ந்து
கனிஉளப் பாங்கில் பசுவொன்று வருநாளில்
கடவுள்தரு சோதனை யதனால்
அங்கொருவேங் கைதன்பசிக் கிரையெனப் பாய்ந்து வர
அது கண்டு நற்பசு நயமாய்
அனைத்துயிரும் காக்கும் ஆண்டவனுக் கனுதினமும்
அபிடேக நீர்கொண் டுசெலும்
தன்பணியை முடித்தும் இன்கன்றைக் கண்டதன்பின்
தன்மையுடனே வருவே னென்று
தயவுடனே வேங்கை முன் விண்ணப்பம் செய்து வந்து
தரணியர் அன்புடன் தேவர்
புங்கவன் மேல் நீர்விட்டு அர்ச்சித்துக் கரங்கூப்பிப்
புலிமுன் போய்ப் புகழினைக் கொண்ட
புவிநேசர் தவமேவு சிவநேசர் துதிபாவு
பொற்க பிலை வனக்கோ கர்ணமே!

(2)

பெரியநா யகியாடப் பெரும் புகழ்சேர்வகுள வனப்
பெருமாளு டத்திருக் குழந்தை
பெருகுமருள் முருக னாடக்குவலயமனைத்துள்
பேரன்புடன் குறைதவிர் மறையென்(று)
அரிய பெருநூலாட அனைத்துயிரெங்கணும் தேட
அன்பென்னும் பண்பு நாட
அழகுச்சுனை யாடச் சுற்றும்
அலைபாடப்பூங் காமயிலா டக்
குயில் கண்டுதொழும் என் கடவுளே
கற்பனைகடந் தநற்கற் கண்டே
கலைமயிலு கன்னியர் கலீரென்ன நகைசிந்துநீ
கற்சிலைக்கு உயிர்தான் வந்ததோ
புரிந்திடவும் உன்னருள் நிலையனைத்தும் தெரிந்திடவும்
புத்தி தருவாய் போகனே யோகனே
புவிநேர் தவமேவு சிவநேசர் துதிபரவு
பொற்கபிலை வனக்கோ கர்ணமே!

(3)

அம்மம்ம என்மேல் இரக்கம் இன்னும் பிறக்க
அனைத்துநாள் தான் ஆகுமோ? நினது
அன்பினைநான் அறிந்திடா அறிவிலியோ எனதெண்ணம்
அற்பமாயினும் உன் மக வல்லவோ?

இம்மை உலகின் எல்லா நலன்களும் எய்திடவே
இன்னருள்பா லிப்பதுன் பாரமே!
ஈன்றவள்தாய் எடுத்தணைக்காவிடிலோ என்னுயிர்மேல்
இரக்கம் காட்டுவதுயா ரம்மா!
மும்மைசால் உலகும் முட்டின்றி இயங்கி வாழ
மூலப்பொரு ளேநீ அருள்வாய்!
முழுமதியே! கதியே! முத்திக்குத் தவமுதலே!
முக்கண்ணி! என்னகச் சொல்நீ
பொம்மையென ஆடும் எனதாட்டம் ஒடுக்கியேஉன்
பூங்கழல்கள் காட்டியாட் கொள்வாய்
புவிநேர் தவமேவு சிவநேசர் துதிபாவு
பொற்கபிலை வனக்கோ கர்ணமே!

(4)

நார்த்தா மலை குமரம லைகுடுமியான் மலையுடனே!
நல்விராலி மலையும் அவற்றில்
நடம்பயிலும் நாதரும் நாதாந்த போதருமே
நம்அறிவில் அறிவாய்க் கலந்து
பேர்கொண்டு பித்தன் உருப்பூண்டு தீமொண்டு
பெருஞ்சுண்டு அமுதம் கண்டு
பிரிவற்று நம்மில் பேதமற்று எளிவந்து
பேருக்கம் கொடுத்து மகிழும்

ஊர்கொண்ட உத்தமன் உலகாண்ட ஒருவனவன்
ஒப்பிலாப் பெரும் ஓங்காரி
அவளீந்து உவந்தளித்த
உயிர்கள் அனைத்தில்
போர்காணாப் புண்ணியன் இராஜகோபாலருமவர் வழிப்
புகழ் கொண்டோர் பலரும் பணியும்
புவிநேர் தவமேவு சிவநேசர் துதிபரவு
பொற்கபிலை வனக்கோ கர்ணமே!

**(5)**

கருத்தின்மிகும் ஒளியே கற்பனைமிகு கவிரசமே!
கருவண்டே களிதேன் சுவையே!
கல்லான மனத்தைக்
கனிவிக்கும் என்தாயே!
வருத்தமுடன் என்குறை வடிவழகிநீ தான்கேட்டால்
வாழ்வு தந்த ருளமாட்டாயோ!
வாட்டமுடன் உன்னடி பற்றினேன்நீ பேசாப் பெரும்
வண்ணப் பொருளாய்நிற் பதென்ன?
பொருத்தமுடன் கோகர் ணப்பெருமான் மகிழ்விக்கும்
புண்ணியப் பெரி யவள்நீ யன்றோ?
பொல்லாத சேயெனில் தாய் நீதள் ளல்நீதமோ?
பொறுப்புனக்கல் லவோநான் சொல்லவோ?
பொருள் நிறையே! பிருந்தையைத் தெளிவித்தருள் பாலிப்பது
பூதேவியின் கருணை யம்மா
புவிநேர் தவமேவு சிவநேசர் துதிபரவு
பொற்கபிலை வனக்கோ கர்ணமே!

# துணைநின்ற நூல்கள்


1 A manual of the Pudukkottai State Vol. II, Part-I, K.R. Venkatarama Iyar, Second and Revised Edition, 1940.

2. புதுக்கோட்டை, திருகோகர்ணம் கோயில் (வரலாறு) ஆர். பஞ்சநதம் பிள்ளை, 1979.

3. Archaelogical Guide to Pudukkottai District, N.S. Ramaswamy, 1982.

4. புதுக்கோட்டை-திருகோகர்ணம் அருள்மிகு பிரகதம் பாள் உடனுறை கோகர்ணேசுவரர் திருக்கோயிலும் திருமுறைகளும் - புலவர் அன்பு கணபதி, 2000.

5. ஸ்ரீ பிரஹதம்பாள் திருக்கோயில் வரலாறு; மகா கும்பாபிஷேக வெளியீடு, 24.06.2005

6. புதுக்கோட்டை மாவட்ட வரலாறு சங்ககால மன்னர்கள் - புலவர் பு.சி. தமிழரசன், 1998.

7. திருகோகர்ணம் ஸ்ரீ பிரகதம்பாள் திருக்கோயில்- வர லாறும் வழிபாட்டு முறையும்-'சுதர்சனம்' தயாரிப்பு (அச்சிடப்படாத நூல்)

8. Guide to The Important Monuments in and around Pudukkottai, -M. Raghupathy ('Sudharsanam') Compilation, Unpublished.



திருகோகர்ணம் ஸ்ரீபிரகதம்பாள்
உடனுறை கோகர்ணேசுவரர் ஆலயம்





